# கல்கி

KALKI
30.11.86
ரூ 1.50



## இவரால் பதவி இழந்தவர்கள் என்ன செய்கிறார்கள்..?

# காப்டனுக்குக் கண்ணியம் வேண்டாமா?

**— காவஸ்கரை விளாசுகிறார் கபில்!**

**Cricket, My Style** என்ற பெயரில் கபில் தேவின் புத்தகம் சமீபத்தில் வெளியாகியுள்ளது. அதில் காவஸ்கருடன் தமக்கு நிலவிய சுமுகமற்ற உறவையும் பம்பாய்ப் பத்திரிகையாளர்கள் தம்மை அநியாயமாய் எதிர்த்ததையும் ஒளிவு மறைவின்றி எழுதியுள்ளார் கபில். சில பகுதிகளை இங்கே தந்திருக்கிறோம்:

'கபில் இனிமேல் ஓர் அரைச்சதம் கூட எடுக்க மாட்டார் பாருங்கள்!'—சுனில் காவஸ்கர் பத்திரிகையாளர்களிடம் பகிரங்கமாகச் சொன்னார். பாகிஸ்தானுக்கு எதிராக (1979 – 80) போட்டித் தொடர் நடந்து கொண்டிருந்த சமயம் அது. எனக்குத் தாள முடியாத அதிர்ச்சி. இதை அவர் என்னிடம் நேருக்கு நேர் சொல்லியிருந்தால் கூட நான் வருத்தப்பட்டிருக்க மாட்டேன். ஆனால் பொது இடத்தில் பத்திரிகையாளர்களிடம் இப்படிச் சொல்லிவிட்டார். அடுத்த நாளே நான் 69 ரன்கள் எடுத்து அவர் கூற்றைப் பொய்யாக்க நேர்ந்தது — அதுவும் பிட்ச் பௌலர்களுக்குச் சாதகமாக இருந்த சமயத்தில்!

எல்லாம் முடிந்த பிறகு, என்னை ரோஷப்படுத்தி, சிறப்பாக ஆடத் தூண்டுவதற்காகத்தான் தாம் அப்படிச் சொன்னதாக சன்னி ஒரு விளக்கம் கொடுத்தார். ஒரு காப்டன் இப்படி நடந்து கொள்வார் என்று நான் எதிர்பார்க்கவில்லை.

இந்தச் சம்பவம் 'நான் காப்டனாக நேர்ந்தால் ஒரு போதும் இதுபோல் நடந்து கொள்ளக்கூடாது' என்று என்னை உறுதி கொள்ளச் செய்தது என்றால், அதே தொடரின் போது நடந்த இன்னொரு சம்பவம் எப்படியேனும் இந்திய அணியின் காப்டன் ஆகிவிட வேண்டும் என்றே என்னைப் பிரதிக்ஞை கொள்ளச் செய்தது; சென்னை டெஸ்டில் சன்னியும் நானும் இணைந்து ஆடிக் கொண்டிருந்த போது இம்ரானின் பந்து வீச்சைச் சந்தித்துக் கொண்டிருந்த சன்னி ஒற்றை ரன் எடுக்க என்னை அழைத்தார், அந்த அழைப்பு நியாயமானது. நாங்கள் வெகு சுலபமாக ஒரு ரன் எடுத்திருக்க முடியும். ஆனால் பந்து சென்ற தூரத்தை நான் சரியாகக் கணிக்காததால் அந்த ஓட்டத்தை எடுக்க நான் சம்மதிக்கவில்லை. இம்ரான் வீசிய அடுத்த பந்திலேயே சன்னி 'காட்ச்' கொடுத்து 166 இல் அவுட் ஆகிவிட்டார். ஓய்வு அறைக்குத் திரும்பிய போது சன்னி என்னை விளாசித் தள்ளிவிட்டார்! அந்த ஒற்றை ரன்னை எடுத்திருந்தால் இம்ரானின் அடுத்த பந்தை அவர் சந்தித்திருக்க வேண்டாம்; 'அவுட்' ஆகியுமிருக்க மாட்டார் என்பது அவர் வாதம். எளிதாக எடுத்திருக்கக் கூடிய ஓட்டத்தை எடுக்காமல் போனதற்கு நான் வருத்தப்பட்டாலும் தாம் அவுட் ஆனதற்கு அதுதான் காரணம் என்று சன்னி திரும்பத் திரும்பச் சொன்னது என்னை மிகவும் புண்படுத்திவிட்டது. என் உணர்ச்சிகளைப் பற்றித் துளிக்கூடக் கவலைப்படாமல் அவரால் பேச முடிந்தது — ஏனென்றால் அவர் காப்டன்!

நான் சன்னியை எதிர்த்துப் பேசவில்லை. பதுங்கிப் பாய்வது என்று முடிவு செய்துவிட்டேன். அதே மாட்சின் இரண்டாவது இன்னிங்ஸில் ஏழு விக்கெட் எடுத்து இந்தியாவின் வெற்றிக்கு அடிகோலினேன். தலைசிறந்த ஆட்டக்காரராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டேன்.

சுனில் காவஸ்கரிடம் எனக்கு அளவில்லாத மரியாதை உண்டு; அவருடைய ஆட்டத்தை மதிக்கிறேன். ஆனால் சில சூழ்நிலைகளில் எங்கள் இருவரது அணுகுமுறையும் வேறுபட்டதால்தான் எங்கள் நல்லுறவு பாதிக்கப்பட்டது.

நன்றி: ஹிந்துஸ்தான் டைம்ஸ்





ஒரு சராசரி தொழில் அல்லது வர்த்தக நிறுவனத்தில் ஒருவர் பதவியில் இருந்தால், அது எந்தப்பதவியாக இருந்தாலும் சரி, அவரைப் பதவி நீக்கம் செய்வதெனில் ''நீக்கப் போகிறேன்'' என்று முன்கூட்டியே சில மாத நோட்டீஸ் கொடுத்து விட்டுத் தான் செய்வார்கள். ஆனால் மாண்புமிருகளின் கதியைப் பார்த்தீர்களா? நமது நாட்டு அரசியல் சட்டம் 164 (1) பிரிவின்படி, ஒரு மாநிலமந்திரி கவர்னரின்விருப்பம்இருக்கும். வரைதான் பதவியில் இருக்க முடியும். ஆனால் இதில் 'கவர்னரின் விருப்பம்' என்பது, மெஜாரிட்டி கட்சியின் தலைவருடைய விருப்பம்தான். நமது நாட்டில் ஜனாதிபதிகள், கவர்னர்கள் எல்லாம் அலங்காரத் தலைவர்

# மாண்புமிகு மந்திரிகள்

கள்தானே தவிர, அதிகாரம் படைத்த தலைவர்கள் அல்ல. நமது அரசியல் சட்டப் பிரிவில், 'கவர்னரின் விருப்பம் நீடிக்கும் வரை ஒருவர் மந்திரி பதவியில் நீடிக்கலாம்' என்று இருப்பதைக் குறித்து சுப்ரீம் கோர்ட் ஒரு தீர்ப்பில் கூறும்போது, 'இந்த வாக்கியத் தின் சரியான 'அர்த்தம் புரியவில்லை!' என்றே சொல்லியிருக்கிறது!

இருபத்தைந்து பேர் கொண்ட இந்த அளவுக்குப் பெரிய மந்திரிசபை இதற்கு முன்னால் இருந்ததேயில்லை. பக்தவத்சலம் எட்டு மந்திரிகளைக் கொண்டே ஆட்சி செய்தார். அண்ணாவும், காமராஜரும் ஒன்பது மந்திரிகளை வைத்துக் கொண்டார்கள். கலைஞர் கூட அதிகபட்சமாக 16 மந்திரிகளைத்தான் வைத்துக் கொண்டார். ஆனால் எம். ஜி. ஆர். மட்டுமே 25 மந்திரிகளை நியமித்துப் புரட்சி செய்தார். இந்த 25 ன் கூட்டு எண்ணிக்கை 7 என்றும், அதுதான் எம். ஜி. ஆரின் ராசியான எண் என்றும் பேசப்பட்டு வந்தது.

பதவி நீக்கம் செய்யப்பட்ட எல்லா அமைச்சர்களும் 'பதவி கொடுப்பதும் எடுப்பதும் புரட்சித் தலைவரின் உரிமை' என்று வெளியில் கூறிக் கொண்டாலும், மனத்தில் வருத்தம் இருக்கவே செய்யும். காரணம் அந்த அளவுக்குச் சலுகைகளை அனுபவித்தவர்களாயிற்றே!



இரண்டு அரசாங்க பி. ஏக்கள். இவர்களைத் தவிர அமைச்சரே தனியாக ஒருவரை நியமித்துக் கொள்ளலாம்! பெரும்பாலான அமைச்சர்கள் தங்களுக்கு வேண்டிய கட்சிக்காரர்களைத்தான் இந்த மூன்றாவது பி. ஏ. பதவிக்குப் போட்டுக் கொள்வார்கள். இந்த பி.ஏ. வுக்குத்தான் அதிகாரமும் அதிகம். மற்ற இருவர் இவர் சொல்வதை (அல்லது மந்திரி சொல்வதை) செயல்படுத்துகிறவர்களாகத்தான் இருப்பார்கள். இரண்டு தொலைபேசிகள். இதில் சர்வதேச போன் கால்கள் முதற் கொண்டு, குப்பாம்பட்டி கால் வரை எல்லாம் பேசப்படும். பேசுபவர்கள் அரசாங்கக் காரியம் பற்றித்தான் பேச வேண்டு

• வீரப்பன்



• ஹண்டே



• யூசப்



மென்பதில்லை. தவிர, அம்பாஸிடர் கார் உண்டு. பெட்ரோல் இஷ்டப்பட்ட பங்க்கில் போட்டுக் கொள்ளலாம். மாதம் முதல் தேதி அமைச்சரிடம் கையெழுத்து வாங்கிக் கொண்டு பில் கொடுத்தால் தொகை உடனே கிடைத்துவிடும். விமானத்தில் செல்ல வேண்டுமா? **Air exchange form** என்று ஒரு விண்ணப்பம் இருக்கிறது. அதை பி. ஏ. பூர்த்தி செய்து இந்தியன் ஏர்லைன் ஸிலோ அல்லது ஏர் இந்தியாவிலோ கொடுத் தால் டிக்கெட் ரெடி. பெரும்பாலான மந்திரி கள் விமானத்தில் போகும் போது பாது காப்பு அதிகாரியை மட்டும் (சப் – இன்ஸ் பெக்டர் அந்தஸ்து) உடன் அழைத்துக் கொண்டு போவார்கள். ரயிலில் சென்றால் ஒரு முதல் வகுப்பு 'கூபே'யே ரிசர்வ் செய் யப்படும். இது தண்டம்தானே என்றால், 'பாதுகாப்பு வசதியை முன்னிட்டு' என்று பதில் வரும். எம். ஜி. ஆர். ஆட்சியில் ஒரு மாபெரும் சாதனை கிரீன்வேஸ் ரோட்டில் மந்திரிகளுக்குப் பங்களா கட்டிக்கொடுத்தது. இப்போது பதவியிழந்துள்ள பத்து மந்திரி களில் வீரப்பன், ஹண்டே தவிர மற்றவர் கள் அரசாங்க வீட்டில்தான் இருந்தார்கள். அது சரி, சொந்த வீட்டில் இருந்தால் எப்படி என்கிறீர்களா? அதற்கும் அரசாங்கம் வாடகை கொடுக்கும். மாநில பொதுப்பணித் துறை சதுர அடிக்கு இவ்வளவு தொகை என்று நிர்ணயிக்கும். சம்பளமோ மாதம் 2000 ரூபாய்தான் (பாவம்!) எப்படிச் சமாளிக்கிறார்கள் என்று கேட்கிறீர்களா? அதை எழுதினால் மான நஷ்ட வழக்குப் போட்டு விடுவார்கள். மந்திரிகளுக்காக ஆகும் செலவுகள் சட்டசபையில் சமர்ப்பிக் கப்படும். ஆனால் தட்டிக் கேட்க முடியாது!

இவ்வளவு சலுகைகளையும் அனுபவித்த பிறகு மந்திரி பதவியை விட்டுப்போவதென் பது ஒரு க்டுமையான சோதனைதான். கவர்னர் அறிவித்த அந்த விநாடியிலிருந்து அந்தஸ்தை இழந்து விடுகிறார்கள். சம்பளமும் அன்று வரைதான். போகும்

• கோவேந்தன்



• வீராசாமி





அரங்கநாயகம்

போது இரண்டு மாத சம்பளத்தைக் கொடுத் தனுப்புவோம் என்பதெல்லாம் கிடையாது. அடுத்த நாளே காலையில் கோட்டையில். இருந்து பொது நிர்வாகத் துறை ஆட்கள், பொதுப்பணித் துறை ஆட்கள் வந்து விடு கிறார்கள். நாற்காலிகள் அகற்றப்படுகின் றன. இரண்டு தொலைபேசிகளில் ஒன்று 'கட்' செய்யப்படுகிறது. அரசாங்க வீட்டில் இருப்பவர்கள் இரண்டு மாதம் வாடகையில் லாமல் தங்கிக் கொள்ளலாம். பின்னர் இரண்டு மாதம் ஒரு குறைந்தபட்ச வாடகை வசூல் செய்யப்படும். அதன் பிறகு 'மார்க் கெட் ரெண்ட்' என்று அந்த அளவு பங்களா வுக்கு வெளியில் என்ன வாடகை வாங்குகி றார்களோ அதைக் கறந்து விடுவார்கள். அதனால் அதுவரை எந்த மாஜி மந்திரியும் அரசாங்க வீட்டில் தங்குவதில்லை.



காளிமுத்து

### வீரப்பன்:

முதலில் 90 எம். எல். ஏக்கள் ஆதரவு, என்று சொல்லப்பட்டு வந்தது. இப்போது கழுதை தேய்ந்து கட்டெறும்பு ஆன கதையாகச் சைதை துரைசாமி ஓர் ஆதரவாளர் என்று மட்டும் வெளிப்படை யாகத் தெரிகிறது. பத்திரிகையாளர்களைத் தவிர்க்கும் இவர் கைவசம், சினிமாத் தொழில் இருக்கிறது. சட்டசபையில் திரு நாவுக்கரசுக்கு எதிராக ஸீட் கொடுத்து வீரப் பனை மேலும் அவமானப்படுத்தியுள்ளார் முதல்வர் என்று வீரப்பன் ஆதரவாளர்கள் கூறுகிறார்கள். ஆனால் மனிதர் உணர்ச்சிகளை வெளிக்காட்டுவதில்லை. நெல்லைத் தொகு திக்கும் போய் வந்து கொண்டிருக்கிறார்



விஜயலட்சுமி

### ஹண்டே:

அமைச்சராக இருந்த போதே நேரம் இருந்தால் டிஸ்பென்ஸரிக்குப் போய் வந் தவர். இப்போது காலையில் ஒரு முறை டிஸ் பென்ஸரிக்குப் போய்விட்டுப் பின்னர் அ.தி.மு.க. தலைமை நிலையத்துக்குச் செல் கிறார். மதியம் ரெஸ்ட், பின்னர் மாலையில் மீண்டும் டிஸ்பென்ஸரி. மகன் புதிதாக நர்ஸிங் ஹோம் கட்டியிருந்தாலும் தாம் அந்த நாளில் எங்கு தொழில் நடத்தினாரோ,



கோமதி சீனிவாசன்



நல்லுச்சாமி

அங்கேயேதான் தொடர்ந்து நோயாளிகளைக் கவனிக்கிறார்.

**யூசுப்:**

எதிர்காலத் திட்டமாக நல்ல ஐடியாக்களை வைத்து இருக்கிறார். கோவையில் ஏழை எளியவர்களுக்குத் தொண்டு செய்ய ஸ்ரீ வைஷ்ணவ ஆயிஷா டிரஸ்ட் என்கிற கேன்ஸர் மருத்துவமனை, மற்றும் ஆராய்ச்சி நிலையம் ஆரம்பிக்க இருக்கிறாராம். மகள் சென்னையில் வசிப்பதால் தொடர்ந்து சென்னையில்தான் இருக்க வேண்டும். வாடகை வீடு பார்த்துக் கொண்டிருக்கிறார். சிறு தொழில் தொடங்கலாமா என்றும் யோசித்து வருகிறார்.

**கோவேந்தன்:**

இந்த மனிதருக்கு முதல் எதிரி ஜெயலலிதா. பதவியிழந்ததைப் பற்றிக் கேட்ட போது, அழாத குறைதான். 'எல்லாம் அந்த அம்மா செய்த வேலை' என்று அடித்துச் சொல்கிறார். டீ. வி. நியூஸ் கேட்டுத்தான் மந்திரி பதவி போனது தெரியுமாம். எதிர்காலத் திட்டம் என்று இப்போதைக்கு ஒன்றும் யோசிக்கவில்லையாம்.

**வீராசாமி:**

மனிதர் இன்னும் ஷாக்கிலிருந்து விடுபடவில்லை. ஒருமுறை எம். ஜி. ஆரைச் சந்திக்கப் போய், முடியாமல் வந்துவிட்டதாகத் தெரிகிறது. ஜெ. பற்றிப் பேச மறுக்கிறார். அடுத்து என்ன செய்வது என்று இன்னும் புரியவில்லையாம்!

**அரங்கநாயகம்:**

பத்திரிகையாளர்களைத் தவிர்க்கிறார். இந்த முன்னாள் ஆசிரியர். எதிர்காலத் திட்டம்... என்றெல்லாம் கேட்டால் எதற்குமே பதிலில்லை.

**காளிமுத்து:**

துக்ளக் பேட்டியின் பின் விளைவுகளே போதும் போதுமென்றாகி விட்டது போலும். 'பேட்டி வேண்டாம் ஸார்' என்று போனவுடன் மறுக்கிறார். குடும்பத்தினரை மதுரைக்கு அனுப்பிவிட்டார். 'கட்சிக் கூட்டங்களில் நிறையப் பேசுவேன். எம். எல். ஏ. என்ற கடமை இருக்கிறதே, அதைச் செய்வேன்' என்று உற்சாகமாகச் சொல்கிறார். மதுரையை மையமாக வைத்துத்தான் இனி செயல்படுவார் என்று தோன்றுகிறது.

**விஜயலட்சுமி:**

இவரது குடும்பத்திற்கு எல்லாமே எம். ஜி. ஆர்தான். அ. தி. மு. க. வின் தீவிர உறுப்பினரான இவரது அண்ணன் சுகுமாரன் 1973 இல் சுட்டுக் கொல்லப்பட்ட பிறகு இவரது குடும்பத்திற்குப் பாதுகாப்புக் கொடுப்பவர் எம். ஜி. ஆர்தான். நீக்கப்பட்டது குறித்துக் கேட்டால், 'எல்லாம் தலைவர் இஷ்டங்க' என்று சொல்கிறார். சேலத்திற்குப் போய் செட்டில் ஆவதாக இருக்கிறாராம். இவரது கணவர் பழனிச்சாமியும் தீவிர அ. தி. மு. க. "என் மனைவி மந்திரியாக இல்லாததால் என்னால் இன்னும் கொஞ்சம் ஃப்ரீயாகச் சில காரியங்களைச் செய்ய முடியும். இவர் மந்திரியாக இருக்கும் போது நான் அதிகாரிகளிடம் பேசவே பயப்படுவேன். ஏதாவது சொன்னால் 'மந்திரியின் கணவர் என்று அதிகாரம் காட்டுகிறார்' என்று சொல்லிவிடப் போகிறார்களே என்ற பயம் எனக்கிருந்தது. இனி அது இல்லை" என்று சொல்கிறார்.

**கோமதி சீனிவாசன்:**

மந்திரி பதவி இழந்த தினத்திலிருந்து உடம்பு சரியில்லாமல் ஆகிவிட்டார். அஜீரணக் கோளாறு என்றார்கள். நாங்கள் சென்ற சமயம் சுலோசனா சம்பத் வந்து பார்த்துச் சென்றார். 'அவரது மனநிலை, உடல்நிலை இரண்டுமே பாதிக்கப்பட்டிருக்கின்றன' என்கிறார் அவரது கணவர் சீனிவாசன்.

**நல்லுச்சாமி:**

முதலில் தீவிரமான ஜெயலலிதா ஆதரவாளர். பின்னர் வீரப்பன் ஆதரவாளராக மாறி பலியாடாகி விட்டவர். "திருச்சி மாவட்ட அ. தி. மு. க. வில் பல குழப்பங்களை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்" என்று முசிறிப்புத்தனால் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறார். முன்பு வக்கீல் தொழில் பார்த்த இந்த மந்திரி, 'மறுபடி அந்தத் தொழிலுக்கே திரும்பக் கூடும்' என்கிறார்.

— **நமது நிருபர்கள்**

மேலட்டை வண்ணப்படம்,

**ராமச்சந்திரன்**

புகைப்படங்கள்: **சுபா**


**கல்கி**
**கோகுலம்**
**மங்கையர் மலர்**

ஆசிரியர் குழுவினர் மட்டும் புதிய முகவரியில் செயல்படுகின்றனர்:

28, ஐந்தாவது தெரு,
ஏரி வட்டம், நுங்கம்பாக்கம்,
சென்னை—600 034.
போன்: 4 7 3 3 8 9

மற்ற பிரிவினர் வழக்கம்போல்,

ரேஸ்கோர்ஸ் சாலை,
கிண்டி, சென்னை—600 032.

என்ற முகவரியிலேயே செயல்படுகின்றனர்.

போன்: நிர்வாகம்: 4 3 15 4 3
சர்க்குலேஷன்
விளம்பரம்: 4 3 4 1 5 7
அச்சகம்: 4 3 4 1 9 0



தபால் கட்டண உயர்வு
டெலிபோன் கட்டண உயர்வு
அர்ஜுன் சிங்
ஆரம்பத்துலே கஷ்டமாத் தான் இருக்கும்! போகப் போகப் பழகிடும்!




என்ன நடந்துடிச்சி? போலீஸ் விசாரணையாவது, மண்ணாவது!.. .... சரி அடுத்துத் தள்ளுங்க.. போலீஸ் அதிகாரியை சஸ்பெண்ட் பண்ணிட்டுடன்! போங்க..போங்க
போலீஸ் கற்பழிப்பு- கொடுமைக்கு பரிகாரம் வேண்டும்!
தங்கமணி கிராம மக்கள்




பெங்களூருக்கு
பிரபாகரன்
ராமச்சந்திரன்
இலங்கைப் பிரச்சினை
திரும்பும் போது
ஆஆஆஆஆ
இலங்கைப் பிரச்சினை



**கல்கி**

1986 நவம்பர் 30
மலர் 45 இதழ் 18
அக்ஷய கார்த்திகை 14



# சிந்திக்கட்டும், ஈழப்போராளிகள்!

பெங்களூரில் தெற்கு ஆசிய நாடுகளின் மண்டல ஒத்துழைப்பு மாநாடு நடந்த போது தொடக்க தினத்தன்றே, ''இதற்கெல்லாம் மாநில அரசுக்கு எவ்வளவு செலவு?'' என்று ஒரு நிருபர் கணக்குக் கேட்டார். அதற்கு ஹெக்டே, ''எல்லா பில்களும் வந்து சேரட்டும்; கணக்குப் பார்த்துச் சொல்கிறேன்'' என்று பெருந்தன்மையோடு பதிலளித்தார். கொஞ்சமாகவா செலவாகியிருக்கப் போகிறது? ஏக்கச்சக்கம்தான் — நிச்சயம்!

ஆனால் இந்த மாநாட்டினால் விளைந்திருக்கிற, விளையப் போகிற நன்மைகளை ரூபாய்க் கணக்கில் யாரும் மதிப்புப் போட்டுவிட முடியாது. ஒரு காமன்வெல்த் மாநாட்டினை விடவும் ஓர் அணிசேரா நாடுகளின் மாநாட்டை விடவும் இந்த மாநாடு அதி முக்கியமானது என்பதில் ஐயமில்லை. எப்படி? ஒரு தேசத்துக்கு, குறிப்பாக அபிவிருத்தி அடைந்து வரும் நாட்டுக்கு அதன் முன்னேற்றத்துக்குப் பெருந்தடை போர்; மற்றும் ராணுவ பட்ஜெட். யுத்தம் என்றால் மக்களின் மனங்கள் ஒருமுனைப்படுகிற ஒரே ஒரு லாபம் தவிர மற்றபடி எல்லாம் பெருநஷ்டம்தான்; மக்களின் மகத்தான சக்திகளும் நாட்டின் ஏராளச் செல்வமும் வீண் விரயமாகிப் போகும். போர் என்பது இங்கே உலகின் மறுபுறத்திலிருந்து கிளம்பி வந்துவிடாது. முக்கால்வாசிப் போர்கள் அண்டை நாடுகளிடையேதான் மூள்கின்றன. எனவே அண்டை நாடுகள் குறித்து எச்சரிக்கையாக இருப்பது எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு அவர்களுடன் சமாதானத்தை நாடுவதும் முக்கியம். உடனடியாக எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்து, அன்பு பெருகி, சிநேகம் முற்றி ஜியா ஓட்டமாய் ஓடிவந்து ஜெயில் சிங்கைக் கட்டித் தழுவிக் கொள்ளப் போவதில்லை. ஆனால் பிரதமர்கள் கைகுலுக்குவதும் பேசுவதும் அதிகாரிகள் பிரச்னைகளைத் தீர்க்கவும் ஒத்துழைப்புக்கு வழிவகுக்கவும் விவாதங்களையும் பேச்சு வார்த்தைகளையும் நடத்துவதுமே பெரிய காரியங்கள். இவையே சூட்டைத் தணிக்கும். சட்டென்று யுத்தம் தொடங்க முடியாமல் தாமதங்களை ஏற்படுத்தும். முயற்சிகளை விடாமல் தொடர்ந்தால் நேச உணர்வுகள் வளர்வதும் சாத்தியமே. எனவேதான் மற்ற பல மாநாடுகளை விடவும் ராஜீவ் கூட்டிய இந்த மாநாடு மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்ததாகிறது. அவரது சமாதான, ஒத்துழைப்பு முயற்சிகளுக்கு மக்கள் மனப்பூர்வமான வாழ்த்துக்களையும் ஒத்துழைப்பையும் அளிப்பார்கள்.

இந்த மாநாட்டில் பல்வேறு நாடுகள் கலந்து கொண்டு பலவிதப் பொதுப் பிரச்னைகளையும் இருநாடுகளிடையே மட்டுமுள்ள தனிப் பிரச்னைகளையும் விவாதித்த போதிலும் தமிழர்களாகிய நமக்கு இலங்கையிலிருந்து ஜெயவர்த்தன வந்ததும் அவருடன் ராஜீவ் நடத்திய பேச்சு வார்த்தைகளும்தாம் மிகுந்த பரபரப்பையும் எதிர்பார்ப்பையும் தோற்றுவித்தன. இது இயல்பு. அதிலும் முதல்வர் எம். ஜி. ஆர். பிரபாகரனுடன் பெங்களூருக்கு அவசர அழைப்பை ஏற்றுப் பறந்து செல்கிறார் என்றதும் ஏதோ நல்ல செய்தி கிடைக்கப் போகிறது என்று பேரார்வத்துடன் காத்திருந்தோம். ஆனால் எல்லாம் நனைந்த பட்டாசாகி விட்டது. ஈழப்போராளிகள் ஜெயவர்த்தனவின் சமீபத்திய திட்டத்தையும் அடியோடு நிராகரித்து விட்டனர்.

பிரதமர் ராஜீவ் மிக உறுதியாகக் கூறியுள்ள வார்த்தைகளை ஈழப்போராளிகள் மனத்தில் வாங்கிக் கொள்வது நலம்: ''தமிழ் ஈழம் என்ற கருத்தில் இந்தியாவுக்கு உடன்பாடு கிடையாது. இதை ஓராண்டுக்கு முன்பே ஜெயவர்த்தனவிடம் கூறிவிட்டேன். இலங்கையின் சமீபத்திய திட்டங்கள் நல்லவை. தமிழர் பிரதிநிதிகளும் இலங்கை அரசும் நேரடிப் பேச்சு வார்த்தைகள் நடத்த நல்ல அடிப்படையாக அமையக் கூடியவை'' — இப்படி அழுத்தம் திருத்தமாகக் கூறியுள்ளார் ராஜீவ். இந்தியப் பிரதமரின் மத்தியஸ்த முயற்சிகள் இல்லையென்றால் முத்தரப்பு என்ன, இருதரப்புப் பேச்சு வார்த்தைகள் கூட நடக்கப் போவதில்லை என்பதை ஈழப்போராளிகள் மறக்கக் கூடாது. எனவே ஓரளவுக்கு விட்டுக் கொடுத்துப் பிரச்னையை ஒரு நல்ல முடிவுக்குக் கொண்டு வர அவர்கள் முயல வேண்டும். மாறாக இம்மியும் விட்டுக் கொடுக்க மாட்டோம் என்று மூர்க்கப் பிடிவாதம் செய்தால் 'குத்தும் கொலையும் இன்னும் எத்தனை காலம் நீடிக்க ஈழப்போராளிகள் அனுமதிக்கப் போகிறார்கள்?' என்ற கேள்வி தமிழகத்திலேயே எழும். அவர்கள் பால் தமிழக மக்களுக்கு அனுதாபம் படிப்படியாகக் குறையும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.



— நிலைய இயக்குனருடன் ஒரு பேட்டி

அந்த டாக்டர் அம்மா நவராத்திரிக் கொலுவுக்கு அக்கம்பக்கத்துப் பெண்களை வரும்படி கூப்பிட்டிருந்தார். அன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை. டி.வி.யில் தமிழ் சினிமா! டாக்டரின் அழைப்பை மதித்து மஞ்சள் குங்குமம் வாங்கிக் கொள்ளப் போன பெண்களை டி.வி.யில் ஒரு கண்ணும் வாசலில் ஒரு கண்ணுமாய் வரவேற்றார் டாக்டர். சினிமாவுக்கு இடையே வந்தவர்களை வரவேற்க வேண்டுமே என்ற கவலைதான் அவர் முகத்தில் குடி கொண்டிருந்தது. வந்த பெண்மணிகளும் குழந்தைகளும் கொலுவைப் பார்க்காமல் டி. வி. யைப் பார்க்க, ஏழு மணிக்குச் செய்திச் சுருக்கம் ஆரம்பிக்கவும் கூட்டம் கலைந்தது. அதிலும் "இரும்மா இந்த அட்வர்டைஸ்மெண்ட்டைப் பார்த்துட்டு வந்துடறேன்", என்று ஒரு வாண்டு கெஞ்ச, அதன் அம்மா அதனைத் தரதரவென்று இழுத்துக் கொண்டு வெளியேறிய பின்தான் டாக்டரின் முகத்தில் அமைதி, நிம்மதி!

கொஞ்சமும் கற்பனை கலக்காத இந்த நிகழ்ச்சியைச் சென்னை தூர்தர்ஷன் இயக்குனர் அகிலா சிவராமனிடம் விவரித்த போது அதேபோல் இன்னொரு நிகழ்ச்சியை நமக்கு எடுத்துச் சொன்னார் அவர்!

"ஒரு சகோதரர் தம் தங்கைக்குக் கார்த்திகைச் சீர் கொடுக்கப் போனார். அது ஒரு வெள்ளிக்கிழமை மாலை. சென்னையில் டி.வி. அறிமுகம் ஆகியிருந்த புதிது. தங்கை வீட்டில் இல்லை என்றதும் அவள் பக்கத்து வீட்டிற்கு டி. வி. பார்க்கப் போயிருப்பதை வீட்டாரிடம் கேட்டு அறிந்தார் சகோதரர். அண்ணன் கார்த்திகைச் சீருடன் வந்திருக்கும் செய்தியைத் தங்கைக்குச் சொல்லி அனுப்பினார்கள். ஓட்டமும் நடையுமாக வீடு வந்து சேர்ந்த தங்கை, "உம்! சீக்கிரம் கொடு அண்ணா! ஒலியும் ஒளியும் ஆரம்பித்துவிடும். நான் போகணும்!" என்று அண்ணனிடமிருந்து பணத்தைப் பிடுங்கிக் கொள்ளாத குறையாக வாங்கிக் கொண்டு திரும்பிப் பார்க்காமல் போய்விட்டாள்!"

"இப்படி, படித்தவர், படிக்காதவர் சிறியவர் பெரியவர் என்று பாகுபாடின்றி எல்லோரையும் கட்டிப் போடுகிற சாதனமாய் டி. வி. இருப்பதால் தூர்தர்ஷனின் பொறுப்பு பன்மடங்கு அதிகரித்துள்ளதை உணர்கிறீர்களா?" என்று பேட்டியைத் தொடர்ந்தோம்.

"நிச்சயமாக உணர்ந்திருக்கிறோம். பல பயனுள்ள நிகழ்ச்சிகளைத் தந்து கொண்டும் இருக்கிறோம். ஆனால் நம் நாட்டில் டி. வி. பெரும்பாலும் ஒரு பொழுதுபோக்குச் சாதனமாகவே கருதப்பட்டு வருகிறது. இதை மாற்றி அமைத்தால் நிகழ்ச்சிகளின் தரத்தை உயர்த்தலாம்" என்றார் இயக்குனர்.

கே: இதை எப்படி மாற்றி அமைப்பதாக உத்தேசித்துள்ளீர்கள்?

ப: இது ரொம்ப கஷ்டமான விஷயம். டி.வி. வாங்கும் பலர் வாரத்திற்குக் குறைந்தபட்சம் இரண்டு சினிமா பார்க்கலாம் என்ற எண்ணத்துடன்தான் வாங்குகிறார்கள். குழந்தைகளை வெளியே அழைத்துப் போக வேண்டாம். வீட்டுக்குள்ளேயே பொழுது போய்விடும். பொழுது போக்கிற்கு என்று தனியே செலவு செய்ய வேண்டாம் என்பதால் பணம் மிச்சமாகிறது என்று காரணம் சொல்கிறார்கள்; கணக்குப் போடுகிறார்கள்!

# டீ.வி. பொன்னான நேரத்தைப் பாழாக்குகிறதா?

இப்படிப்பட்ட பார்வையாளர்களுக்குத் தான் நாங்கள் நிகழ்ச்சிகள் தயாரிக்கிறோம். இதில் கூடியவரை விஷய ஞானத்தை வளர்க்கும் நிகழ்ச்சிகளை அடக்க முயற்சி செய்கிறோம்.

கே: விஷய ஞானம் வளர்க்கும் நிகழ்ச்சிகளைவிட சினிமா மற்றும் சினிமா தொடர்பான நிகழ்ச்சிகள்தானே அதிகமாயிருக்கின்றன?

ப: இது உண்மையல்ல. சினிமா தொடர்பில்லாத நிகழ்ச்சிகளுக்குத்தான் அதிக நேரம் ஒதுக்கப்படுகிறது.

கே: இல்லையே, விளம்பரதாரர் அளிக்கும் சில தொடர் நிகழ்ச்சிகளில் கூடச் சினிமா உலகக் கலைஞர்களின் பங்கேற்பும், சினிமாத் தனமும் அதிகமாக உள்ளனவே. இதனால் ஏறத்தாழ ஒவ்வொரு நாளும் சினிமா பார்த்தது போல் ஆகிவிடுகிறதே?

ப: விளம்பரதாரர் நிகழ்ச்சிகள் பொருளாதார நோக்குத் தவிர, நிலையத் தயாரிப்பாளர் அல்லாத இதர வெளித் தயாரிப்பாளர்களுக்கும் வாய்ப்புக்கள் தரவேண்டும் என்ற நோக்குடனும் ஆரம்பிக்கப்பட்டன. விளம்பர தாரரும் சரி, தயாரிப்பாளரும் சரி, தங்கள் நிகழ்ச்சியின் வெற்றிக்கு 'நட்சத்திரக் கலப்பு' தேவை என்று எண்ணுவதால்தான் இது விளைகிறது.

கே: விளம்பரதாரர் நிகழ்ச்சிகள் எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றன?

ப: முதலில் ஸ்கிரிப்டை எங்களுக்குத் தருகிறார்கள். அதைப் படித்து நாங்கள் அங்கீகரித்தால் நிகழ்ச்சியின் ஒரு பகுதியைப் பார்த்துவிட்டு முடிவு செய்கிறோம்.

கே: சமீபத்தில் தொடங்கியுள்ள ஒரு விளம்பரதாரர் நிகழ்ச்சியில் ஒரு குழந்தை அதிகப்பிரசங்கித்தனமாக நடந்து கொள்வது போலவும் ஆசிரியர்கள் கேலிப் பொருளாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளது ஆரோக்கியமாக இல்லையே!

ப: அக்கதையின் ஸ்க்ரிப்டைப் படித்த போது, அதன் காட்சி அமைப்பு எப்படி இருக்கும் என்று நாங்கள் சிந்தித்துப் பார்க்கத் தவறியதுதான் இதற்குக் காரணம். வேறு சில தவறுகள் எதிர்பாராத முறையில் நடந்து விடுகின்றன. மூன்று பேட்டிகளுக்கும் தனித் தனியே சம்மதம் தெரிவித்தோம். ஆனால் யதேச்சையாக அவை மூன்றும் ஒரே தினத்தில் ஒரே நிகழ்ச்சியில் ஒளிபரப்பாகிவிட்டன. அரை மணி நேரத்திற்குள் மூன்று பேட்டிகளைப் பார்ப்பது சலிப்பூட்டும் விஷயம் ஆயிற்றே.

கே: டீ. வி. யைத் தொடர்ந்து பார்ப்பதால் விளையும் தீமைகள் பற்றி ஒரு மனோ தத்துவ இயல் நிபுணரிடம் கேட்டபோது அதிக அளவில் விளம்பரங்களைப் பார்ப்பதால் நம்மை அறியாமல் மனத்தில் சில பதிவுகள் ஏற்பட்டு நமது தேவைகள் 'செயற்கையாக' அதிகரிக்கின்றன. அனாவசியமாக அதிகப் பொருட்களை வாங்குகிறோம் என்றார். ஓர் அரசாங்க அமைப்பு என்கிற முறையில் தூர்தர்ஷன் இதை அனுமதிக்கலாமா?

ப: இது விளம்பர யுகம்! எங்கும் எதிலும் போட்டி. இந்த யுகத்தில் டீ.வி. பார்ப்பது என்பது வாழ்க்கையின் ஓர் அம்சமாகவே ஆகிவிட்டது. இந்நிலையில் சமுதாயம் ஓரளவுக்குப் பாதிக்கப்படத்தான் செய்யும். கூடியவரை ஒரு நிகழ்ச்சிக்கு முன்பு காட்டப்படும் விளம்பரங்களின் எண்ணிக்கையைக் குறைக்க முயன்று வருகிறோம்.

கே: நிலையம் தயாரிக்கும் நாடகங்கள் ஒரு விதத்தில் சுவையில்லாமல் இருக்கின்றன என்றால் விளம்பரதாரர் நிகழ்ச்சிகளிலோ நகைச்சுவை என்ற பெயரில் அபத்தமும் ஆபாசமும் நிறைந்துள்ளனவே? உருவத்தில் சிறியவரையோ பருமனாக இருப்பவரையோ எள்ளல் செய்வது போன்ற நிகழ்ச்சிகளை எப்படி அனுமதிக்கிறீர்கள்?

ப: யார் மனத்தையும் புண்படுத்தும் நோக்கம் எங்களுக்கு இல்லை. உருவத்தில்

விசித்திரமாக இருக்கும் சிலருக்கு நடிப்புத் தான் தொழில். மேலும் நகைச்சுவை என்று நாம் அங்கீகரித்து ரசிக்கும் விஷயங்கள் நமது படிப்பறிவையும், நாம் வளர்ந்த பின்னணியையும் பொறுத்து வேறுபடும். எல்லோரையும் எல்லாச் சமயங்களிலும் திருப்திப் படுத்துவது இயலாத காரியம்.

கே: நிகழ்ச்சிகள் நன்றாக இல்லை என்று சொல்லிக்கொண்டே அவற்றைத்தொடர்ந்து பார்ப்பவர்கள் பற்றி...?

ப: நமது மக்கள் இன்னும் **selective viewing** என்பதைக் கற்றுக் கொள்ளவில்லை. மாலை ஆறு மணி ஆனால் டி.வியை 'ஆன்' செய்து தங்களுக்குச் சம்பந்தமில்லாத நிகழ்ச்சிகளையும் பார்க்கிறார்கள். நிகழ்ச்சி நன்றாக இல்லையென்றால் டி. வி.-யை அணைத்து விட்டுப் போவதற்கும், நன்றாக இல்லை என்று அவர்கள் கருதும் நிகழ்ச்சிகளைப் பார்க்காமல் இருப்பதற்கும் முயற்சி செய்ய அவர்கள் தயாராயில்லை. மிக எளிய, சிக்கனமான பொழுதுபோக்குச் சாதனமாக அவர்கள் டி. வி. யைக் கருதுவதுதான் இதற்குக் காரணம்.

கே: தேர்ந்தெடுத்துப் பார்ப்பது முக்கியம் என்பதை நீங்களே ஏன் பார்வையாளர்களுக்கு உணர்த்தக் கூடாது?

ப: எப்படி? மனைமாட்சி போன்ற நிகழ்ச்சிகளில் வேண்டுமானால் இக்கருத்தை வலியுறுத்தலாம். ஆனால் மக்கள் பார்ப்பதற்கென்றே நிகழ்ச்சிகளைத் தயாரித்துவிட்டு அவற்றைப் பார்க்காதீர்கள் என்று நாங்கள் விளம்பரப் படுத்த முடியுமா?

கே: லட்சக்கணக்கான மக்களின் பொன்னான நேரத்தைப் பயனுள்ளதாகவோ பயனற்றதாகவோ ஆக்குவது உங்கள் கையில் தான் இருக்கிறது. அப்படி இருக்கையில் **prime-time** இல் — அதாவது மிக அதிகப் பேர் டி. வி. முன்னிலையில் நங்கூரம் பாய்ச்சி உட்கார்ந்துவிடும் மாலை ஏழு முதல் ஒன்பது வரையில் நீங்கள் விஷய ஞானம் வளர்க்கும் நிகழ்ச்சிகளைத் தர வேண்டாமா?

## 'எங்களுக்கு எதற்கு சமுதாயப் பார்வை?

— விளம்பரதாரர் கேட்கிறார்



• கோத்ரேஜ் வழங்கும் டி. வி. நிகழ்ச்சியில்....

"டி. வி. யில் விளம்பரம் செய்வதால் எங்களுக்கு விற்பனை அதிவேகமாய்க் கூடியிருக்கிறது. உதிரி விற்பனையைத் தவிர மொத்த வியாபாரிகளிடையேயும் எங்கள் தயாரிப்புகள் பிரபலமாகியுள்ளன. இன்னும் சொல்லப் போனால் நாங்கள் கோத்ரேஜ் தயாரிப்பான சோப்புக்கு விளம்பரம் செய்தால் அந்தச் சோப்பு விற்பதோடு, கோத்ரேஜ் தயாரிப்பான முகப் பவுடரின் விற்பனையும் அதிகரிக்கிறது" என்றார் தென் மண்டல சேல்ஸ் மானேஜர் ஏ. கே. எஸ். ராவ்.

இவர்கள் விளம்பரத்திற்கென்று ஒதுக்கும் தொகையில் பெரும்பான்மைப் பகுதி டி. வி. விளம்பர நிகழ்ச்சிகளுக்குத்தான் போகிறதாம். "டி. வி. மூலமாகவும், பார்வையாளர்கள் மூலமாகவும் நீங்கள் இவ்வளவு பயன் பெறுகிறீர்களே, உங்களது நிகழ்ச்சிகளில் சிறிதளவேனும் சமுதாயப் பார்வை இருக்க வேண்டாமா?" என்று கேட்டபோது பொரிந்து தள்ளிவிட்டார் ராவ்:

"சினிமா நிகழ்ச்சிகளுக்குத்தான் வரவேற்பு அதிகமாக இருக்கிறது. அதை விட்டால் நாடகங்கள் ஓரளவுக்கு வரவேற்பைப் பெறுகின்றன. இவற்றை எண்பது சதவிகிதம் பேர் பார்க்கிறார்கள் என்றால் கல்வி நிகழ்ச்சிகளையும் வினாடி வினா போன்ற பொது அறிவு நிகழ்ச்சிகளையும் நாற்பது சதவிகிதம் பேர்தான் பார்க்கிறார்கள். எங்கள் நோக்கம் விளம்பரம் அதிகம் பேர்களைக் கவர வேண்டும், அதனால் விற்பனை அதிகரிக்க வேண்டும் என்பதுதான். சமுதாயப் பார்வையையும், சமுதாய நோக்கையும் கவனித்துக் கொள்வது தூர்தர்ஷனின் கடமை!"

இலக்கியத் தரம் மிக்கதும், கருத்துக்களை நளினமாய்ச் சொல்வதுமான தொடர் நாடகத்தை அளித்த நிறுவனம் ஒன்று, அடுத்த தொடராக ஓர் இரண்டாந்தர நிகழ்ச்சியை இப்போது வழங்கி வருவதைப் பார்க்கையில் வியாபார நோக்குள்ள இந்நிறுவனங்களிடம் சமுதாயப் பார்வையை எதிர்பார்ப்பது நமது தவறுதான் என்று புரிகிறது.

## ''டீ.வி.க்கு மக்கள் அடிமைகளாகிறார்களா?

— மனோதத்துவ நிபுணர் பதிலளிக்கிறார்.


டாக்டர் சந்திரசேகர்

**மா**லை ஆறு மணி ஆனால் வீட்டில் லைட்டுகளைப் போடுவது போல் டீ.வி.யையும் 'ஆன்' செய்துவிட்டுச் சம்பந்தா சம்பந்தமில்லாத நிகழ்ச்சிகளைப் பார்ப்பதும்; ''ஐயோ போர்! அறுவை! கொஞ்சம் கூட நன்றாக இல்லை!'' என்று சொல்லிக் கொண்டே நிகழ்ச்சிகளைப் பார்ப்பதும் ஒருவித அடிமைத்தனம் தானே? சிகரெட், மதுவுக்கு அடிமையாவது போல் டீ.வி.க்கு மக்கள் அடிமையாகிறார்களா?'' என்ற கேள்வியை மனநோய் நிபுணர் டாக்டர் சந்திரசேகரிடம் கேட்டோம். அவர் சொன்ன கருத்துக்கள்:

''அடிமைத்தனம் என்ற வார்த்தைப் பிரயோகம் சற்று வலுவானது. **conditioned reflex** என்ற வகையில் இப்பழக்கத்தைச் சேர்க்கலாம். இதனை மீறி வேறு விதமாகச் செயல்பட ஒருவருக்கு ஏராளமான மனவலிமை தேவைப்படும். இந்த மனவலிமை உள்ளவர்கள் மட்டும் தான் டீ.வி. நிகழ்ச்சி நன்றாக இல்லை என்றால் பார்க்காமல் எழுந்து போவார்கள் அல்லது டீ.வி.யை அணைப்பார்கள்.

''படிப்பதையோ கேட்பதையோ மனத்திரையில் ஓடச் செய்து பதிவு செய்து கொள்ள வேண்டும். ஆனால் டீ.வி. பார்க்கும்போதே எவ்வித கூடுதல் முயற்சியும் இன்றி விஷயங்கள் மனத்தில் பதிகின்றன. பார்ப்பதும், கேட்பதும் ஒரே சமயத்தில் நடப்பதால் கிரகிப்பது மிக எளிதாகிறது. எனவே இந்தச் சாதனத்திற்குச் சக்தி மிக அதிகம்.

''ஆபாசமோ வன்முறையோ டீ.வி.யில் காண்பிக்கப்பட்டால் அது குழந்தைகளின் மனங்களைப் பெருமளவுக்குப் பாதிக்கும். வன்முறை எளிதானது, நியாயமானது என்ற அபிப்பிராயத்தை ஏற்படுத்தும். சில சமயங்களில் வன்முறைக் காட்சிகள் நமது உள்ளத்தில் இருக்கும் குமுறலுக்கு ஒரு வடிகாலாக அமைந்து மனக்கொதிப்பைத் தணிப்பதும் உண்டு.

''நமது இல்வாழ்க்கையையும் சமூக வாழ்க்கையையும் டீ.வி. பெரிதும் பாதிக்கிறது. வெளியே போவது, நண்பர்களைச் சந்திப்பது குழந்தைகளைக் கொஞ்சுவது, அவர்களுடன் விளையாடுவது போன்றவை குறைந்து சிறிது காலத்துக்குப் பிறகு ஒட்டுமொத்தமாக நின்றே போய்விடுகின்றன.

''இவை நமக்குத் தெரிந்தே நிகழும் மாற்றங்கள் என்றால் நம்மை அறியாமல் சில மாற்றங்களையும் டீ.வி. விளைவிக்கிறது. அரசியலில் மட்டுமின்றிச் சமுதாயப் பார்வை, தார்மீக எண்ணம் முதலியவற்றில் நமது அடிப்படைக் கொள்கைகளே மாறிவிடக் கூடும். வீட்டிற்கு வந்த விருந்தினர்களை விட, நல்ல புத்தகங்களை விட, இயற்கை அழகுகளை விட டீ.வி. நிகழ்ச்சி நமக்கு முக்கியமாகத் தோன்றும். அதிக விளம்பரங்களைத் திரும்பத் திரும்பப் பார்ப்பதால் அவை உள்மனத்தில் பதிவாகி நம்மை அதிகம் பொருட்கள் வாங்கத் தூண்டுகின்றன. நமது 'தேவைகள்' செயற்கையாக அதிகரிக்கின்றன.''

ப: அலுவலகம் செல்வோரும் சரி, வீட்டு வேலை செய்வோரும் சரி, நீங்கள் குறிப்பிடும் அந்த நேரத்தில்தான் ஆய்ந்து ஓய்ந்து போய் உட்காருகிறார்கள்...அந்தச் சமயத்தில் ஒயர் பாக் பின்னுவது எப்படி என்று ஒரு நிகழ்ச்சியை அளித்தால் அவர்களுக்குச் சலிப்பாக இருக்கும். அவர்கள் அப்போது எதிர்பார்ப்பது பொழுது போக்கு.

கே: குழந்தைகள் இதனால் பாதிக்கப்படுகிறார்களே?

ப: இதைப் பெற்றோர்கள்தான் கவனிக்க வேண்டும். குழந்தைகள் டீ.வி. பார்த்துக் கொண்டே ஹோம் ஒர்க் செய்வதை அனுமதிக்கக் கூடாது. பரீட்சை சமயங்களில் குழந்தைகள் டீ.வி. பார்க்காமல் பாடத்தில் கவனம் செலுத்த வேண்டுமானால் பெற்றோர்களும் தங்கள் அளவில் சிறிது தியாகம் செய்யத் தயாராய் இருக்க வேண்டும்.

கே: செய்திகளை இன்னும் சுவாரஸ்யமான முறையில் தொகுத்து அளிக்கலாமே? டீ.வி. ஒரு விஷுவல் மீடியம் என்பதே செய்திகளின் போது நினைவு வைத்துக் கொள்வதில்லை.

# நாலு பேரைக் கேட்டபோது......



* கே. வி. சிவசங்கரன்

"இரண்டு வருடங்களாக டீ. வி. பார்க்கிறேன். நிகழ்ச்சிகளின் தரத்தில் எந்தவிதமான முன்னேற்றமும் இல்லை. நாடகங்களிலும் விளம்பரதாரர் நிகழ்ச்சிகளிலும் நல்ல கதையம்சம் இருந்தால் விறுவிறுப்பு இல்லை; விறுவிறுப்பு — action இருந்தால் நல்ல கதை அம்சம் இல்லை! காமெராவைக் கையாளும் முறையும் இன்னும் நிறைய முன்னேற வேண்டும். புதிய விஷயங்களை, சத்தான கருத்துக்களைத் தரும் நிகழ்ச்சிகளே இல்லை. என் பேரக்குழந்தைகள் டீ. வி. பார்த்து எதையும் புதிதாகக் 'கற்றுக் கொள்ளவில்லை' என்று அடித்துச் சொல்லுவேன்."



* நந்தினி

"பள்ளிக்கூடம் போய் விட்டு வந்து சாயந்திரம் வீட்டு வேலை பார்க்கறேங்க. வேலை செய்யற வீட்டிலே கலர் டீ. வி. பார்க்கறேன். பழைய சினிமாவா பிளாக் அண்டு ஒயிட்லே வச்சுட்டாங்கன்னு ரொம்ப ஏமாத்தமா இருக்கும். சினிமா, நாடகம், கட்டாயம் பார்ப்பேன். சில நாள் ஒலியும் ஒளியும் பார்ப்பேன். பரீட்சை இருந்தாக் கூட விட மாட்டேன். டீ.வி. பார்த்துட்டு வீட்டுக்குப் போய் உட்கார்ந்து படிப்பேன். எப்படியும் கிளாஸ்லெ முதல் ராங்க் வாங்கிடுவேன்."

நந்தினியிடம், 'வசதி இருந்தால் முதலில் உங்கள் வீட்டுக்கு டீ. வி. வாங்கிவிடுவாயா?' என்று கேட்ட போது, "இல்லீங்க. வீட்டுக்கு இன்னும் முக்கியமாத் தேவையான சாமான்கள் எவ்வளவோ இருக்கு. அதையெல்லாம் வாங்கின பிறகும் வசதி இருந்தா ரேடியோ வாங்குவேன்; அப்புறம்தான் டீ. வி! ஆனால் அதையெல்லாம் இப்ப நினைக்கப் 'பார்க்கலாமா?' என்று பொறுப்புணர்ச்சியோடு பதில் சொன்னார்.



* மைதிலி மணி

"ஆஃபிஸிலிருந்து வரும் போது வீட்டிலே டீ. வி. 'ஆன்'லதான் இருக்கும். ரொம்ப 'டயர்டா' இல்லேன்னா எல்லா நிகழ்ச்சிகளையும் பார்க்கிறதுண்டு. சினிமா, நாடகம், ஒலியும் ஒளியும் கட்டாயம் பார்ப்பேன். குழந்தைகள் ஹோம் ஒர்க் முடிக்காமல் டீ. வி. பார்க்கச் சம்மதிக்க மாட்டேன். பரீட்சை நாட்களில் கட்டாயம் அனுமதிக்கமாட்டேன். ரொம்பக் கெஞ்சினால் பத்துப் பதினைந்து நிமிஷம் பார்த்துவிட்டுத் திரும்பவும் படிக்க வேண்டும் என்று சொல்லிவிடுவேன். சில நிகழ்ச்சிகள் பிடிக்கவில்லையென்றால் அவற்றை உட்கார்ந்தபடி பார்ப்பதில்லை. ஏதேனும் வேலை செய்தபடி, போக வரப் பார்ப்பேன். நல்ல தமிழ் சினிமா அறிவித்துவிட்டுக் கடைசி நிமிஷத்தில் அதை மாற்றிவிட்டால் ரொம்ப ஏமாற்றமாய் இருக்கும்."



* இராமகிருஷ்ணன்

பேராசிரியர் நன்னன் பாடம் நடத்துவதை மிகவும் ரசித்துப் பார்க்கிறேன். ஆனால் இளந்தென்றல், சிந்திக்க ஒரு நொடி, விளையாட்டு விமர்சனம் போன்ற நிகழ்ச்சிகள் கொஞ்சம் 'டல்' தான். விவசாயிகள், வயலும் வாழ்வும் நிகழ்ச்சியையோ பெண்கள், மனைமாட்சி நிகழ்ச்சியையோ விரும்புகிற அளவுக்கு இளைஞர்கள் நிச்சயம் இளந்தென்றலை ரசிக்க முடிவதில்லை. வழக்கமான பாட்டு,' நடனம், பேட்டி என்றில்லாமல் புதுமையான, துடிப்பான நிகழ்ச்சிகளைப் புகுத்தினால் என்ன?

ப: நிறைய விஷுவல்களைச் செய்திகளில் சேர்த்துக்கொண்டுதான் இருக்கிறோம். அதிக அளவில் செய்திகளைத் தர வேண்டும் என்ற முயற்சியின் காரணமாக விஷுவல்ஸ், சில சமயம் அடிபட்டுப் போகின்றன.

கே: நிகழ்ச்சிகளின் தரம் உயரவேயில்லை என்ற குற்றச்சாட்டுக்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

ப: நான் ஏற்கெனவே சொன்னது போல் டீ. வி. ஒரு பொழுது போக்குச் சாதனமாகக் கருதப்படும் வரை இந்தப் போராட்டம் இருக்கத்தான் செய்யும். நிகழ்ச்சித்



தயாரிப்பில் உள்ள நடைமுறை கஷ்டங்கள் அதிகம். அரசாங்க அமைப்பு என்பதால் எங்களை யார் வேண்டுமானாலும் எப்படி வேண்டுமானாலும் கேள்விகள் கேட்கலாம். நாங்கள் எல்லாவற்றுக்கும் பதில் சொல்லியாக வேண்டும். சில தினங்களுக்கு முன் போலிச் சாமியார்களை expose செய்யும் விதமாக ஒரு நிகழ்ச்சி அமைந்திருந்தது. உடனே ஹிந்து மதத்தை இழிவு படுத்தி விட்டதாகக் குற்றம் சாட்டி ஏகப்பட்ட கடிதங்கள் வந்து குவிந்துவிட்டன!

கே: நிர்வாகத்தையும் நிகழ்ச்சித் தயாரிப்பையும் பிரித்து, பொறுப்புக்களை வகுத்தால் ஓரளவு பிரச்னைகள் குறையுமே?

ப: இது சாத்தியமேயில்லை. தூர்தர்ஷனைப் பொறுத்தவரை இரண்டும் பின்னிப் பிணைந்தவை.

கே: நிகழ்ச்சிகளுக்குப் புதிய கவர்ச்சிகரமான தலைப்புக்களைத் தந்தால் - விஷய ஞானம் வளர்க்கும் நிகழ்ச்சிகளுக்கும் அதிகம் பார்வையாளர்கள் கிடைப்பார்களே?

ப: இப்போதும் அந்நிகழ்ச்சிகளுக்குப் பெருமளவில் பார்வையாளர்கள் இருந்து கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால் எவ்வளவு தூரம் பயனடைகிறார்கள் என்று தெரியவில்லை. நிகழ்ச்சியின் பெயரை மாற்றி என்ன பயன்? தரப்படும் விஷயம் சத்தானதாக, மனத்தைக் கவரும்படியாக இருப்பது தான் முக்கியம்.

எங்கள் மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல், நிகழ்ச்சிகளை மேம்படுத்துவதற்கு இயன்ற அனைத்து முயற்சிகளையும் செய்து வருகிறோம். எல்லோரிடமும் நியாயமாக நடந்து கொள்கிறோம். ஆனால் எல்லாவற்றையும் மீறிக் குற்றச்சாட்டுக்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன. அவற்றுள் சில, மனத்தைப் புண்படுத்த வேண்டும் என்ற நோக்கம் தவிர வேறு இலக்கில்லாதவையாகவும் இருக்கின்றன!

— நமது நிருபர்கள்

புகைப்படங்கள்: கே. வி. ஆனந்த்
யோகா

# குண்டு வெடித்தது போல் ஒரு பேட்டி!

ரிஜிஸ்தர் தபாலில் வந்த ஒரு பார்ஸலை உடைத்து உள்ளே வெகு மதியாக அனுப்பப்பட்டிருந்த கேஸட் டேப் ரிகார்டருக்கு மின் இணைப்பு தர, அடுத்தகணம் டிரான்ஸிஸ்டர் குண்டு போல அது வெடித்து......

கணேஷும் அவர் மனைவியும் மருத்துவமனைக்குச் செல்ல நேர்ந்தது.

விபத்து நேர்ந்ததற்கு இரு தினங் கள் முன்பு திரு கணேஷ் கல்கிக்கு அளித்த பேட்டி இது.

பிரபல தமிழ்ப்பட இசையமைப்பாளர்கள் சங்கர் — கணேஷுக்குச் சமீபத்தில் பெல்ஜியத்திலிருந்து டாக்டர் ஆஃப் லிட்ரேச்சர் (டி. லிட்.) என்ற பட்டம் வந்து சேர்ந்துள்ளது. உலகப் பல்கலைக்கழகம் போன்ற ஓர் அமைப்பு வழங்கிய பட்டம்தான் என்றாலும் இந்திய இசையமைப்பாளர் ஒருவர் டாக்டர் பட்டம் பெறுவது அநேகமாக இதுவே முதல் தடவையாக இருக்கக் கூடும்.

சங்கர் — கணேஷ் இருவரும் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளில் அறுநூறு படங்களுக்கு இசையமைத்தவர்கள்.

இரட்டையரில் ஒருவரான கணேஷைச் சந்தித்து உரையாடினோம். இசையமைப்பதுடன் சில படங்களிலும் இலவசமாக நடித்து வருகிறார் இவர்.

''நான் ஒரு டிரைவரின் மகன். எஸ்.எஸ்.எல்.சி. வரைதான் படித்துள்ளேன். சிறு வயதிலேயே நடனமும் பயின்றவன். நான்கு படங்களில் கதாநாயகனாகவும், மேலும் பல படங்களில் கேரக்டர் ரோல்களிலும் நடித்திருக்கிறேன்.

''ஆரம்பத்தில் நான் மியூசிக் டைரக்டர் ஜி. கே. வெங்கடேஷின் உதவியாளராக இருந்தேன். 'பாச மலர்' உருவாகும்போது மெல்லிசை மன்னரின் குழுவில் சேர்ந்தேன். அங்கு சங்கருடன் பழக்கம் ஏற்பட்டது. கவியரசர் கண்ணதாசன்தான் எங்களை இசையமைப்பாளர்களாக்கியவர். நாங்கள் முதலில் இசையமைத்த 'நகரத்தில் திருடர்கள்' படம் வெளிவரவேயில்லை. இருப்பினும் கவியரசர் எங்களைத் தேவரிடம் பலமாகச் சிபாரிசு செய்து 'மகராசி' படத்தில் அறிமுகப்படுத்தினார். அதனால்தான் நாங்கள் டைட்டிலில், ''கவிஞர் வழங்கிய தேவரின் சங்கர் கணேஷ்'' என்று போட்டுக் கொள்கிறோம்!

''சங்கீத ஞானம் என்பது கடவுள் கொடுத்த வரப் பிரசாதம். நல்ல ஸ்வர ஞானமும், இதர இசைத் திறன்களும் உடைய ஒருவர் இசையமைப்பவர் ஆகிவிட முடியாது. அதே நேரத்தில் ஸ்வர ஞானமே இல்லாத ஒரு போர்வழி மியூசிக் டைரக்டராக மாற முடியும்! இதற்கு அதிர்ஷ்டமும், நேரமும், புத்திசாலித்தனமும் ஒன்று சேர வேண்டும்.

''நான்தான் இசையுலகிலேயே பெரியவன் என்று மார் தட்டுபவர்கள் ஓரிரு வருடங்களில் காணாமல் போய் விடுகிறார்கள். கர்நாடக இசை மேதைகளைத் தெய்வமாக மதித்து வணங்கும் நாங்கள் பல படங்களுக்குத் தொடர்ந்து இசையமைத்து வருகிறோம்.

''மேகம் மழையாகப் பெய்யும். அது பெய்கிற இடத்தில் நிற்பவன் 'என் காட்டிலேதான் மழை' என்று நினைப்பான். சில நிமிடங்களில் மேகம் நகர்ந்து விடும். அப்புறம் காடுமில்லை, மழையுமில்லை!

''நாங்கள் பெரிய தயாரிப்பாளராக இருந்தாலும் சரி, சிறிய தயாரிப்பாளராக இருந்தாலும் சரி, ஒரே மாதிரிதான் பழகுகிறோம். சிறு தயாரிப்பாளர்கள் ஒரு லட்சம், ஐம்பதாயிரம் கடன் வாங்கிக் கொண்டு படம் எடுக்க வருகிறார்கள். அவர்களைக் கேவலமாக நினைக்காமல் மதிப்புக் கொடுத்து வரவேற்றால், அவர் படமெடுத்து ஹிட்டானால் அதன் மூலம் நாற்பது ஐம்பது குடும்பங்கள் பிழைக்கும்.

''இருக்கிறவரை சம்பாதித்துக் கொண்டு போகலாம் என்று மட்டும் ஒருவர் நினைப்பது தவறு. சம்பாதித்த பிறகும் கஷ்டம் வரலாம். ஏழைகள் வாழ்த்தினால்தான் ஒருவன் வாழ முடியும்.''

ஒரு பெரிய பிரசங்கமே செய்து முடித்த கணேஷிடம், ''இந்த டாக்டர் பட்டம் எப்படிக் கிடைத்தது?'' என்று


சங்கர்


கணேஷ்



கேட்டோம்.

''உங்களைப் போன்ற ஏதோ ஒரு நல்ல இதயம் எங்களை உன்னிப்பாகக் கவனித்துச் சிபாரிசு செய்திருக்கலாம்'' என்றார்.

சங்கர் — கணேஷ் இருவரும் ஆயிரக்கணக்கான கோவில் கச்சேரிகளை இலவசமாகச் செய்து தருகிறார்கள். 'திருப்பணி வள்ளல்கள்' என்ற பட்டப் பெயரும் இவர்களுக்கு உண்டு. அத்துடன் காங்கிரஸ் நூற்றாண்டு விழா, தி. மு. க., அ. தி. மு. க., அம்பேத்கார் பேரவை, குருடர் பள்ளி, மனநோய் மருத்துவமனை, ராணுவ மருத்துவ மனை போன்றவற்றிற்கு இலவசக் கச்சேரிகளை நடத்திக் கொடுத்துள்ளனர். சினிமாவில் காசு சம்பாதிப்பதை மட்டும் பெரிதாக எண்ணாமல் சேவை உணர்ச்சியுடன் ஆற்றலைப் பயன்படுத்தி எல்லோருக்கும் நல்லவராக விளங்குவதால்தான் இந்த டாக்டர் பட்டம் இருவருக்கும் கிட்டியிருக்கிறதோ!

# எம்.ஜி.ஆர். கேட்ட 'ஒன்ஸ் மோர்!'

சங்கர் — கணேஷ் குழுவில் கிட்டத்தட்ட இருபது வருஷங்களாகப் பணியாற்றி வரும் கண்ணன், அதே குழுவில் பாட வந்த லதாவைக் காதலித்து மணந்தார். திருமணத்துக்குப் பின் கண்ணன் — லதா தனியே கச்சேரிகள் செய்யத் தொடங்கினர். சமீபத்தில் புதிய பூவிது படத்தின் மூலம் இசையமைப்பாளராகவும் இந்தத் தம்பதி அறிமுகமாகியுள்ளனர். இப்படி ஒரு தம்பதி இசையமைப்பாளராக இயங்குவது இந்தியாவில் இதுவே முதல் தடவை.

எம். ஜி. ஆர். ஒன்ஸ்மோர் கேட்ட சம்பவத்தை நினைவு கூர்கிறார் கண்ணன்:

''சில வருடங்களுக்கு முன் பாம்குரோவ் ஓட்டலில் ஒரு திருமண வரவேற்புக்கு வந்திருந்தார், முதல்வர். அப்போது நான், 'நாம் கும் ஜாயேகா' என்ற ஹிந்திப் பாடலைப் பாடினேன். எம். ஜி. ஆர். அந்தப் படப் பாட்டை விரும்பிக் கேட்டதுடன், மீண்டும் ஒருமுறை பாடச் சொல்லி ரசித்தார்.

'''முதல்வர் மேடைக்கு வரவேண்டும்' என்று மைக்கில் அறிவித்தேன்.

'''முடியாது' என்று சைகை செய்தார் முதல்வர்.

'''நான் காலஞ்சென்ற மியூசிக் டைரக்டர் சி. ஆர். சுப்பராமனின் மகன். என்னை மேடையில் முதல்வர் ஆசீர்வதிக்க வேண்டும்' என்று நான் கூறியதும், மேடைக்கு ஓட்டமாய் ஓடிவந்த முதலமைச்சர், 'உங்க அப்பா மியூசிக்கும் நல்லா இருக்கும். ஆளும் ஜோரா இருப்பார். அவர் மகனா நீங்க?' என்று வியப்பும் அன்பும் கலந்து பாராட்டி மகிழ்ந்தார்.

''சி. ஆர். சுப்பராமன் என்ற பெயர் அப்படி ஒரு மந்திரச் சக்தி போல் வேலை செய்தது. அப்பாவின் புகழில் ஓரளவாவது பெற முதல்வரின் ஆசி எனக்கு உதவட்டும்.''

— மன்னை சௌரிராஜன்



• கண்ணன் • லதா



''அய்யய்யோ! இதென்ன சமையலறைக்குள்ளேயே பிச்சை கேட்க வந்துட்டே?''

''வாசலில் நீங்க புதுசா 'வெல்கம்' போர்டு மாட்டியிருக்கீங்களே! அதற்கு நான் மதிப்புக் கொடுத்து நடந்துக்க வேண்டாமா?''

பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

18 என்னைத் தொடரவும் என்ற அந்தத் துண்டுக் காகிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் மோட்டார் பைக்கின் அருகிலேயே நின்று கொண்டிருந்தாள் சுசிலா.

இந்தக் காகிதத்தைப் படித்துவிட்டுப் பரத் இதன்படி யாரையோ தொடர்ந்து சென்றிருக்க வேண்டும். சரி, எவ்வளவு நேரமாயிற்று! அழைத்த ஆசாமியோடு அவசரமாகப் புறப்பட்டு வேறு எங்காவது செல்ல வேண்டியிருக்கலாம். இவ்வளவு நேரமா? பைக் இங்கே இருக்கிறது. நான் இங்கே இருக்கிறேன்.

பொறுப்பில்லாமல் நடந்து கொள்ள மாட்டாரே...

மண்டபத்தின் உள்ளே போய் அலுவலக அறையில், ''சார், நீங்க இங்கேயேதான் இருப்பீங்களா?'' என்றாள் மானேஜரிடம்.

''ஆமாம்மா. நான் தனிக் கட்டை. இங்கேயேதான் தங்கியிருக்கேன், என்ன விஷயம்?''

''என் பேரு சுசிலா. நான் பரத்னு ஒருத்தரோட வந்தேன். திடீர்னு ஒரு வேலையா அவர் புறப்பட்டுப் போய்ட்டாரு. காணோம். நாங்க வந்த பைக் வாசல்ல இருக்கு. பரத் வந்தாலோ, போன் செஞ்சாலோ நான் அவரோட வீட்டுக்குப் போயிருக்கேன்னு சொல்லணும். சொல்றீங்களா?''

''சரிம்மா.''

ஆட்டோபிடித்துப்பதினைந்து நிமிடங்களில் பரத் வீட்டின் வாசலில் இறங்கிக் கொண்ட சுசிலாவைப் பார்த்து...தூரத்தில்டிரான்ஸ்ஃபார்மர் நிழலில் நின்றிருந்த தாமஸ் ஆச்சரியப்பட்டான்.

காரில் நெடுநேரமாகக் கொட்டாவியுடன் காத்திருந்த சுகுமார் அருகே போனான்.

''என்ன தாமஸ் இது. அந்தப் பொண்ணு மட்டும் தனியா ஆட்டோல வந்து இறங்குது. பைக் எங்கே? பரத் எங்கே?''

''அதான் எனக்கும்புரியலே. இரு, வர்றேன்'' என்ற தாமஸ் பரத்தின் வீட்டை நோக்கி மெதுவாக நடந்தான்.

சுசிலா கதவைத் திறந்து உள்ளே

வந்து ஹாலில் கையைப் பிசைந்து கொண்டு குறுக்கும் நெடுக்குமாக நடந்தாள். கடிகாரத்தைப் பார்த்துத் திடுக்கிட்டாள். மணி பதினொன்று பத்து.

பரத் ஏதோ ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக்கவேண்டும். இல்லையென்றால் இவ்வளவு நேரம் எந்தவிதத் தொடர்பும் இல்லாமல் தவிக்க விட மாட்டார்.

கல்யாண மண்டபத்தின் எண்ணைச் சுழற்றிப் பேசினாள்!

''சார், நான் சொன்னபடி பரத் வந்தாரா?''

''வரலையேம்மா.''

''வாசல்ல பைக் நிக்குதா இன்னும்?''

''இரும்மா, பார்த்துட்டுச் சொல்றேன்... ஆமாம்மா, நிக்குது.''

ரிசீவரை வைத்தாள். என்ன செய்யலாம்?

இன்ஸ்பெக்டர் நாதனைத் தொடர்பு கொண்டு சொல்லலாமா? எதைச் சொல்வது? எதை மறைப்பது? அசோக்கிற்குப் பாதுகாப்பு கொடுத்திருக்கும் விஷயத்தைச் சொல்ல முடியாது.

மேஜை மேலிருந்த பரத்தின் டயரியைப் புரட்ட... கமிஷனர் அலுவலகத்தில் வேலை பார்ப்பதாகச் சொல்லி, எண் சொல்லி விட்டுப் போன முருகேசனின் பெயரும், போன் நம்பரும் கண்ணில் பட்டன.

இவர் போலீஸ் சம்பந்தப்பட்டவர். அதே சமயம் பரத்தின் நண்பர். இவர் உதவி செய்வது சிக்கலில்லாதது. சௌகரியமானது.

உடனே அந்த எண்ணைச் சுழற்றி, எக்ஸ்டென்ஷனை அழைக்க... போன் எடுக்கப்படவே நான்கு நிமிடங்கள் ஆயிற்று.

''இன்ஸ்பெக்டர் முருகேசன் ப்ளீஸ்.''

''குவார்ட்டர்சில இருப்பாரு. நீங்க யாரு?''

''தெரிஞ்சவங்க. ரொம்ப முக்கியமா அவரோட பேசியாகணும். குவார்ட்டர்சிலே போன் இருக்கா? ப்ளீஸ், நம்பர் சொல்லுங்களேன்.''

''ரோ டைப் குவார்ட்டர்ஸ் மேடம். ஒவ்வொரு வீட்லயும் போன் கிடையாது. பொதுவா ஒரு போன், அதுக்கு ஓர் அட்டெண்டர் உண்டு. நம்பர் தர்றேன். முயற்சி பண்ணிப் பாருங்க. அட்டெண்டர் தூங்காம, போன் பக்கத்திலே இருந்தா உங்க அதிர்ஷ்டம்.''

சொல்லப்பட்ட எண்ணைக் குறித்துக் கொண்டு, நன்றி சொல்லித் தொடர்பைத் துண்டித்து, அந்த எண்ணை முயல... விடாமல் அடித்துக் கொண்டே இருந்தது.

நம்பிக்கையிழந்து வைக்க நினைத்த நேரத்தில் எடுக்கப்பட்டுக் கொட்டாவிக் குரல், ''ஹலோ'' என்றது.

''இன்ஸ்பெக்டர் முருகேசனோட உடனே நான் பேசணுங்க. ரொம்ப அவசரம்.''

''என்னன்னு விவரம் சொல்லுங்க. காலைல நான் நினைவா சொல்லிடறேன்.''

''இல்லைங்க. அவரு உடனே புறப்பட வேண்டியிருக்கும். அவரெக்கூட்டிட்டுவாங்க ப்ளீஸ். ரொம்ப முக்கியமான சேதி.''

''மனுஷனைத் தூங்க விட மாட்டீங்களே...'' என்று நேரடியாக அலுத்துக் கொண்டு, ''லைன்லயே இருங்க, வர்றேன்'' என்று முணகிக் கொண்டே செல்வது கேட்டது.

ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு ஹலோ சொன்னார் முருகேசன்.

''சார், நான் பரத் வீட்லேர்ந்து சுசிலா பேசறேன். நினைவிருக்கா?''

''நினைவிருக்காவா? என்ன சமாசாரம் சொல்லுங்க?''

''ஒரு சிக்கல். பரத் ஏதோ ஆபத்திலே இருக்கிறதா நினைக்கிறேன். எனக்குக் கவலையா இருக்கு. என்ன செய்யறதுன்னு புரியலே. அதான் உங்க உதவி கேக்கலாம்னு...''

''பிரச்னை சரியாப் புரியலே. போன்ல வேணாம். நான் புறப்பட்டு வர்றேன். நேர்ல பேசலாம். தைரியமா இருங்க. பரத் இப்போ எங்கே?''

''தெரியலே. அவரை யாரோ சாமர்த்தியமா கடத்தியிருக்கணும்னு நான் பயப்படறேன்.''

''சேச்சே. அப்படி எல்லாம் இருக்காது.



நான் வர்றேன் உடனே.''

சுசிலா பெருமூச்சுடன் போனை வைக்க... வாசலில் காதைத் தீட்டிக் கொண்டு நின்று இவள் பேசினதையெல்லாம் சேகரித்த தாமஸ், நடந்து, சுகுமாரை அடைந்து, ''காரை எடு சுகுமார்'' என்று அமர்ந்து கொண்டான்.

''என்ன தாமஸ்?'' என்றான் சுகுமார் காரை ஓட்டியபடியே.

''அந்த முகம் தெரியாத எதிரி மறுபடி நம்ம முகத்திலே கரியைப் பூசிட்டான் சுகுமார். பரத் கடத்தப்படணும்னு நாம் சிரத்தையா திட்டம் போட்டுக் காத்திருந்தோம். இல்லேயா? அதே நேரத்திலே வேறே இடத்திலேர்ந்து அவனைச் சாமர்த்தியமாக் கடத்தியிருக்கான்.''

''மை காட்!''

''எனக்கு எதுவுமே புரியலே சுகுமார். நான் கொலே செய்யப் போனா — எனக்கு முன்னாலேயே கொலே செஞ்சிடறான். நான் போன்ல மிரட்ட முடிவு செஞ்சா, எனக்கு முன்னாலேயே போன் செஞ்சிடறான். இப்போ இந்தக் கடத்தல்லேயும் முந்திக்கிட்டான்.''

''இதெல்லாம் எப்படி தாமஸ்?''

''பதில் சொல்ல வேண்டியவன் கேள்வி கேக்கக் கூடாது.''

''நீ என்னைச் சந்தேகப்படறதை விட மாட்டியா?''

''வேற யாரைச் சந்தேகப்படறது? எல்லாத்தையும் விடு. இன்னிக்கு, இத்தனை மணிக்குக் கடத்தணும்னு திட்டம் போட்டது நீயும், நானும் மட்டும்தான். இது எப்படி அவனுக்குத் தெரிஞ்சது?''

''எனக்குப் புரியலே தாமஸ்.''

''எனக்குப் புரியுது. நீ டபிள் கேம் ஆடறே.''

''சத்தியமா இல்லே, என்னை நம்பு.''

''உன் வார்த்தையை நம்பவும் தோணுது. சந்தேகப்படாமலும் இருக்க முடியலே. சுகுமார், உனக்குச் சம்பந்தமில்லேன்னே வச்சிப் பாரு. பரத் நமக்கு எதுக்காகத் தேவைப்பட்டான்?''

''அசோக்கோட இருப்பிடத்தைத் தெரிஞ்சுக்கிறதுக்காக.''

''இப்போ பரத் கடத்தப்பட்டிருக்கான். அந்த ஆளுக்கும் அசோக்கோட முகவரி தேவைப்படுது. அது எதுக்கு? நமக்குக் காரணம் இருக்கு. ஒண்ணு அசோக்கை போலீஸ்ல மாட்ட வைக்க விரும்புறோம். இல்லேன்னா அவனைத் தீர்த்துக் கட்டத் துடிக்கிறோம். அந்த எதிரியோட நோக்கம் என்ன?''

''அவனுக்கும் இதுவே நோக்கமா இருக்கலாம்.''

''அப்படின்னா அவன் நமக்கு எதிரி இல்லே. நண்பன், நமக்குத் தெரியாம, நமக்குப் போட்டியா, நமக்கு உதவற அந்த நண்பன் யார்? நம் நோக்கத்திலே சொத்து லாபம் இருக்கு. அவனுக்கு என்ன லாபம் இதிலே?''

''தாமஸ், இதையேதான் வகை வகையா வாக்கியங்களை மாத்தி நம்மையே கேட்டுக்கிட்டிருக்கோம். பதில்தான் கிடைக்கலே'' என்றான் சுகுமார்.

''கூடிய சீக்கிரம் கிடைச்சுடும் சுகுமார். அதுவரைக்கும் எனக்கு நிம்மதி இல்லே'' என்று திரும்பி, ஓடுகிற இருட்டை ஜன்னல் வழியாக வெறித்தான் தாமஸ்.



**அ**ந்த வலுக்கட்டாயக் கார் பயணம் துவங்கியவுடன் பரத் நிதானமாக மனத்திற்குள் எண்ண ஆரம்பித்தான். 1... 2... 3... 4... 5...

கண்கள் கட்டப்பட்டதால் காட்சி இல்லே. காதுகள் அடைக்கப்பட்டதால் ஓசை இல்லே. வாய் ஒட்டப்பட்டதால் வார்த்தை இல்லே. கட்டப்படாத மூளை எந்தத் தொந்தரவும் இல்லாமல் தொடர்ந்து எண்ணிக் கொண்டே வந்தது.

72... 73... 74...

ஒரு லெஃப்ட் டர்ன் செய்தது கார். அதை மனத்தில் குறித்துக் கொண்டான்.

456... 457... 458...

இப்போது ரைட் டர்ன்!

938-இல் டாக்ஸி நின்றது. பரத் தோளில்



''வெற்றி பெற்ற பிறகு நம்ம ஊர்ப் பக்கமே தலை வைத்துப் படுக்காத எம்.எல்.ஏ. ஏழுமலையை, அடிக்கடி நம்ம ஊருக்கு வரும்படி செய்துட்டீங் களே, எப்படி?''

''நம்ம ஊர்லே அவருக்கு ஒரு 'சின்ன வீடு' செட்டப் பண்ணிட்டேனே!''

— சேலம் நீலமேகன்.

தட்டப்பட்டு, காரை விட்டு இறக்கப்பட்டான். நடத்தப்பட்டான். அருகாமையில் எந்த வீட்டின் அடுப்பிலோ நிச்சயமாக மீன் குழம்பு! இரண்டு படிகளில் ஏறி வாசல் போல இருந்ததைக் கடந்து உள்ளே நடத்தப்பட்டான். ஒரு நாற்காலியில் அமர்த்தப்பட்டான்.

தகவல் தம்பி என்று தன்னை அறிமுகப் படுத்திக் கொண்ட அவன் பரத்தின் காது களில் இணித்து வைத்திருந்த பஞ்சுத் துணுக்குகளை நீக்கினான், சரட் என்று வாயை மூடியிருந்த பிளாஸ்த்திரியைப் பிய்த்த போது, மீசையின் சில முடிகள் வலியுடன் பெயர்ந்து சென்றன.

பரத் உதடுகளை அசைத்து நமைச்சலை நீக்கச் சிரமப்பட்டான். கண்ணிலும், கைகளி லும் கட்டுக்கள் இருந்தன.

''பரத், இப்போ நீ என் பொறுப் பிலே இருக்கே?''

''சரி'' என்றான் பரத்.

''இதுவரைக்கும் நான் உன்னை அடிக்கலை. என் பெருந்தன்மையை நீ பாராட்டணும்.''

''மந்திரி தலைமையிலே விழாவே ஏற்பாடு செய்திடட்டுமா?''

''உன்னைக் கௌரவமா நடத்த விரும்பு றேன்.''

''சந்தோஷம்.''

''அதனாலே சொல்லிடு.''

''என்ன சொல்ல?''

''அசோக்கோட விலாசம்.''

''அதான் சொன்னேனே...''

''அது பொய் விலாசம்...''

''அதெப்பிடி முடிவுக்கு வந்தே?''

''நான் உன்னை நம்பலை.''

''விலாசம் கேட்டே. துப்பாக்கி முனை யிலே கேட்டே. என் உயிர் முக்கியமா, அசோக்கோட உயிர் முக்கியமா? அதனாலே விலாசத்தைச் சொன்னேன். அதை உறுதி செஞ்சுக்கிற வரைக்கும் என்னோட இருன்னு கொண்டு வந்திருக்கே. உறுதி செஞ்சுக்காம லேயே பேசினா என்ன அர்த்தம்?''

''நீ சொன்ன விலாசம் உண்மைன்னு சொல்றே...''

''சிவப்பு பேனாவிலே அடிக்கோடு போட் டுக்கலாம்.''

''அப்படின்னா சரி, நான் உறுதி செஞ் சுக்கிட்டு வந்துடறேன். நீ தப்ப முடியாது பரத்'' என்று அவன் அந்த ஹாலுக்கும் அடுத்த அறையிலிருந்து கயிறு கொண்டு வந்து, அவனை அமர்ந்திருந்த நாற்காலி யோடு சேர்த்துக் கட்டினான்.

அப்போது டெலிபோன் ஒலிக்க... இந்த வீட்டில் டெலிபோன் இருக்கிறது என்று மனத்தில் குறித்துக் கொண்டான் பரத்.

அவன் டெலிபோனில், ''ஹலோ, நான் தான். உன்னை போன் பண்ண வேணும்னு சொல்லியிருந்தேனே... சரி, பரவாயில்லை. கொண்டாந்தாச்சு. இதோ... இங்கேதான் கட்டி வச்சிருக்கேன். ம். ஒரு அட்ரஸ் சொல்லியிருக்கான். அது உண்மையான்னு தெரிஞ்சுக்கப் போறேன். சரி, சரி, சரி, எனக்குத் தெரியாதா? சரி, சரி. வச்சிடட் டுமா?'' என்று பேசிவிட்டு வந்து, ''பரத், ஒரு தூக்கம் போடேன்'' என்றான்.

''இன்னிக்கு டீ. வி. யில ஒரு நல்ல இங்கி லீஷ் படம் இருக்கு. கண் கட்டை அவுத்து விட்டா தொந்தரவு செய்யாம நீ வர்ற வரைக்கும் பார்த்துக்கிட்டிருப்பேன்.''

''இங்கே டீ. வி. இல்லையே சார்.''

''இருக்குமோன்னு யூகம் செஞ்சேன்.''

அவன் மறுபடி பிளாஸ்திரியை வாயில் ஒட்டிவிட்டு அருகில் இருந்த டேப்ரிகார்டரில் மேற்கத்திய சங்கீதத்தைப் போட்டுவிட்டு, ''கேட்டுக்கிட்டு இரு, வர்றேன். நீ சொன்னது பொய் விலாசமா இருந்தா, இதான் வாழ்க் கைல நீ கேக்கற கடைசி சங்கீதம் பரத்!'' என்று வெளியேறிக் கதவைப் பூட்டுவது கேட்டது.

பரத் சிரித்துக் கொண்டான்.

முட்டாள்! கண்ணைக் கட்டிவிட்டாய், சரி. வாயை ஒட்டிவிட்டாய், சரி. கைகளை இணைத்துக் கட்டிவிட்டாய், சரி. உட்கார்ந்த நிலையில் அப்படியே நாற்காலியோடு இணைத்து வலுவான கயிறால் கட்டியிருக்கி றாய், இதுவும் சரி.

ஆனால்... தவறான நாற்காலியைத் தேர்ந் தெடுக்கலாமா? இது மர நாற்காலி! மரம் — உடையக் கூடிய பொருள்.

பரத் தனது உடல் எடை அனைத்தையும் ஒருபக்கமாகச் சாய்த்து, அமர்ந்த நிலையி லேயே நாற்காலியோடு கீழே சாய்ந்தான். பிறகு இரண்டு கால்களாலும் தரையை உந்தி உந்தி ஒரு சுவரின் ஓரத்திற்கு வந்தான்.

நாற்காலியின் முதுகுப் பாகத்தைச் சுவரில் வேகவேகமாக மோத ஆரம்பித் தான். பத்தாவது நிமிடம் ஒரு சட்டம் முறிய... கயிறு தளர்ந்தது. உடம்பை எக்கி, குறுக்கி அந்தத் தளர்வான கயிற்றிலிருந்தும், நாற்காலியிலிருந்தும் பிரிந்து கைகட்டுடனும், கண் கட்டுடனும், நின்றான் பரத்.

''வெரி குட்'' என்று குரல் கேட்டது.

(தொடரும்)

# உண்மையிலேயே பாதுகாப்பை விரும்புவோருக்கு!

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

சென்னை

(Unit of and Agents for Jayasakthi Group of Finance Companies)

குறைந்த பட்ச டெபாசிட் ரூ. 5000/- ஏற்றுக் கொள்ளப்படும்.
ரூ. 10,000/-க்கு மேல் டெபாசிட் செய்யும் ஒவ்வொரு டெபாசிட்தாரர்களுக்கும் ரொக்க போனஸாக 2% கூடுதல் வட்டி மற்றும் மிக மதிப்புள்ள அன்பளிப்பும் வழங்கப்படும்.

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.**

| | |
|---|---|
| 1-வருடம் | 18% |
| 2-வருடங்கள் | 19% |
| 3-வருடங்கள் | 20% |
| 5-வருடங்கள் | 24% |

**உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி**

| | |
|---|---|
| சென்னை | 39, நடேசன் தெரு (2வது மாடி) சிவா-விஷ்ணு கோவில் அருகில் உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017. போன்: 442216/447186. |
| பெங்களூர் | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன்: 366971. |
| பாண்டிச்சேரி | 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன்: 6493. |
| கோயமுத்தூர் | 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன்: 34369. |
| மதுரை | 41, வடக்கு வெளி வீதி (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் பில்டிங், மதுரை-625 001. போன்: 36004 |
| திருச்சி | 22, மதுரை ரோடு (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில் திருச்சிராப்பள்ளி-620 008. போன்: 23772/31376. |
| தஞ்சாவூர் | எண்: 2 & 3 முதல் மாடி, தி.எ.கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன்: 21626. |
| திருவண்ணாமலை | 14/A, ஆனைகட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 2483. |
| பட்டுக்கோட்டை | 121, தலையாரி தெரு, (முதல் மாடி) பட்டுக்கோட்டை-614 601. போன்: 453. |

LOTUS/JF-127/86/Tam

# நினைவுச்



சேதுவுக்கு இன்று விடுதலை. சட்டம் வழங்கிய தண்டனை பூர்த்தியாகி விட்டது. இனி அவன் சுதந்திர மனிதன். இனி வார்டனால் ''டேய்.... மகனே'' என எழுப்ப முடியாது. கன்னத்தில் 'பளா'ரென்று அறைந்து. ''என்ன முறைக்கிறே?'' என்று கேட்க முடியாது. நீண்டு கொண்டே போகும் பகலும், உறக்கமே வராத இரவுகளும் இனி இல்லை. பக்கத்தில் படுத்துத் தன் பிரியமுள்ள மனிதர்களுக்காக ஏங்கி, சோகக் கதைகள் சொல்லி, கண்ணீர் விடும் சக கைதிகளின் கதைகளை இனிக் கேட்க வேண்டாம்.

இது ஓர் அனுபவம். மறக்கவே முடியாத அனுபவம். பின்னால் வரும் வாழ்க்கையைத் திடமாக்க, கடவுள் அளித்த சோதனை....

''ஹா...''வென்று மூச்சை இழுத்தான். இதுவரை உணராத சுகமாயிருந்தது.

சம்பிரதாயங்களை முடித்துக் கொண்டு ஜெயிலரின் அறையை விட்டு வெளியே வந்தான். வாசலை நோக்கி நடந்தான்.

அவனுக்காகச் சத்தத்துடன் கதவு திறந்தது. பெரிய இரும்புக் கேட்டின் வயிற்றுப் பகுதியில் சின்னக் கதவு. குனிந்துதான் வெளியேற வேண்டும். துப்பாக்கி காவலாளி ஒதுங்க, ''வர்றேன் சார்...'' கடைசியாகத் திரும்பிப் பார்த்தான்.

''வராதே... இங்கேயும் எழவு வீட்டிலேயும் வர்றேன்னு சொல்லக் கூடாது'' பெரிய வயிறு குலுங்கச் சிரித்தான் காவலாள்.

அவனுக்குச் சிரிக்க வரும் என்று சேது நினைத்ததில்லை.

முரட்டு ஆள். ஊரில் பெரிய வஸ்தாது ஆக இருந்தவனெல்லாம் அவனைக் கண்டதும், பயந்த நாய் மாதிரி ஒதுங்கி நிற்பான். முதுகில் வைக்கிற அடியில் முன் நெஞ்சு 'கிண்'ணென்று அதிரும்.

''நேரா ஊருக்குத்தானேடா...?''

''ஆமாம் சார்...''

''எந்த ஊரு?''

சொன்னான்.

''போயி ஒழுங்கா இரு. மறுபடியும் இங்கே வரும்படி நடந்துக்காதே...''

தான் ஒழுங்காக இருந்தவன்தான் என்று சொல்லலாமா? நீதிபதியே நம்பவில்லை; தண்டனை அடைந்து, விடுதலையாகும் போது, அவனை நம்ப வைப்பதால் என்ன ஆகப் போகிறது?

''சரிங்க...''

அம்மா, மஞ்சுளா, சிநேகிதன் வெங்கிடு, பார்சல் சர்வீஸ் முதலாளி என்று முகங்கள் வரிசையாக நீண்டன.

இந்த மூன்று மாதங்களில் அம்மா ரொம்பவுமேதான் கஷ்டப்பட்டிருப்பாள். பார்க்க வருகிற நாளில் அப்படியெல்லாம் இல்லை என்று அவள் சொன்னாலும், உடம்பு காட்டிக் கொடுத்து விடும். பாதியாகி இருந்தாள். முகம் கறுத்திருந்தது. கவலை. ஊராரின் கேவலப் பார்வை.

தன்னைக் கண்டதும் என்ன பண்ணுவாள்?

அழுவாள். ''உன் தலையெழுத்து இப்படி ஆச்சே!'' எனப் புலம்புவாள். தனது தனிமையை, பணக் கஷ்டத்தை, ஊரார் உதவாததை... எல்லாம் முடிந்த பின் கடைசியாய் அந்தக் கேள்வியையும் கேட்பாள்.

''என் அப்படி செஞ்சே?''

''மஞ்சுளாவுக்காகத்தாம்மா...'' சொல்லி விடலாமா? என்றைக்கு இருந்தாலும்

# சின்னம்

தெரிய வேண்டிய விஷயம்தானே அது?

ச்சைய்! அமைதியாக ஓடிக் கொண்டிருந்த வாழ்க்கையில், ஒரு பெண்ணின் வரவால் எவ்வளவு மாற்றங்கள்...?

ஆறு மாதங்களுக்கு முன்புதான் முதன் முதலாக அவளைப் பார்த்தான்.

அப்போது சரியான தண்ணீர்ப் பஞ்சம். ஒரு குடம் தண்ணீருக்காகத் தெருப் பெண்கள் ஓலமிட்டுச் சண்டை போட்டுக் கொண்டிருந்தனர். ''என்னடா சாமி இது...? காலங் கார்த்தால'' எனத் தூக்கம் கலைந்து திண்ணையில் உட்கார்ந்த ஒருநாள் காலையில்தான் அவள் குழாயடிக்கு வந்தாள்.

அந்தத் தெரு மனிதர்களுக்குப் பொருந்தாத அமைதியான முகம். பூப்போட்ட மஞ்சள் தாவணி. துறுதுறுத்த பார்வை. கையில் தகரக் குடம்.

''யார்ம்மா இது?''

''செட்டியார் வீட்டுக்குப் புதுசா குடி வந்திருக்காங்க. வாத்தியார் குடும்பம்.''

''வேறே தெரு கிடைக்கலையா அவுங்களுக்கு? இங்கேதானு வரணும்?''

சேது சிரித்தான்.

அம்மா பதில் சொல்லவில்லை.

வந்தவள் சண்டைகளைக் கண்டு மிரண்டுபோனாள். கழுத்துப் பாசியைக் கடித்தபடியே தயங்கித் தயங்கி நின்றாள். கொஞ்ச நேரத்திற்கு ஒரு தடவை, ''ஏங்க... எனக்கு ஒரு குடம் விடுங்க'' என்றாள். ''வரிசையாப் பிடிச்சா எல்லோருக்கும் கிடைக்கும்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

அவளை யாரும் சட்டை பண்ணப் போவது இல்லை என்றே சேது நினைத்தான். அப்படித்தான் ஆயிற்று. கொஞ்ச நேரத்திலேயே தண்ணீர் நின்றுவிட, காலிகுடத்தைஎடுத்துக்கொண்டு நடந்தாள்.

''பாவம்மா அந்தப் பொண்ணு... முதல் நாள்லியே வெறும் குடத்தோட போகுது.''

''அதுக்கு நாம என்ன பண்றதுடா?''

ஏதாவது செய்யத்தான் வேண்டும் என நினைத்துக் கொண்டான்.

அவசரமாகக் குளித்தான். சாப்பிட்டான்.

''வர்றேம்மா....''

செட்டியார் வீட்டருகில் வந்ததும் தயங்கி

**மும்தாஜ் யாசீன்**



நடந்தான்.

மஞ்களாவின் முதுகு தெரிந்தது. உள்ளே ஒரு நடுத்தர வயதுக்காரி அவளைத் திட்டிக் கொண்டிருந்தாள்.

''பார்த்தீங்களா உங்க அருமை மகளை...? நாலு பாத்திரம் துலக்க ரெண்டு குடம் தண்ணி செலவு பண்ணியிருக்கா...''

''என்னம்மா...?'' — ஆண் குரல்.

''தெருக் குழாயில் பிடிக்கலாம்னு நினைச் சேன்பா... பாத்திரமும் அதிகம்.''

''நினைச்சாப் போதுமா...? புடிச்சிட்டு வந்தியா?'' — பெண்.

''பாதியிலேயே நின்னிருச்சு. வர்றதையும் இங்க யாரும் வரிசையாய்ப் புடிக்க மாட் டேங்கிறாங்கப்பா...''

''மத்தவங்களுக்கு எப்படியம்மா கிடைக் குது?''

''அது வந்து... வரிசையா நின்னு...''

''நாளைக்குச் சீக்கிரமாப் போயிடு...''

''சரிப்பா...''

''கிணத்துல இருந்து தண்ணி இழுக்க எனக்குத் தெம்பு இல்லே. அவளேயே புடிச்சு நிரப்பச் சொல்லுங்க...''

சேது திகைத்தான். வீட்டு நிலைமைகள் இலேசாகப் புரிந்தன.

அவளுக்கு அம்மா இல்லே; சித்தி! இரண்டாம் கல்யாணம் பண்ணும் பலரைப் போலவே, வாயில்லாத அப்பா.

அடுத்த நாள் அவன் கண் விழிப்பதற்கு முன்னதாகவே அவள் குழாயடிக்கு வந்து விட்டாள். அன்றைக்கு முதல் நாளை விட ரகளை அதிகம்.

''பாவம்யா.... புது இடம். நீயே புடிச்சுக் குடுத்திடும்மா...''

இரண்டு நாட்கள் கழித்து. அவனுக்காக வீட்டு வாசலில் நின்றிருந்தாள். அவன் கடந்து செல்லும் போது கிசுகிசுத்த குரலில்,

''ரொம்ப நன்றிங்க'' என்றாள்.

''எதுக்குங்க?''

''உங்க அம்மாகிட்டே சொன்னீங்களாமே.... எனக்கு ஒரு பெரிய பிரச்னை தீர்ந் திச்சு...''

அதன்பின் சேது தற்செயல் போல அவளது வீட்டைப் பார்ப்பது வழக்கமாகி விட்டது.

ஒருமுறை சித்தியின் குழந்தைகளை ஸ்கூலில் விட்டுவிட்டுத் திரும்பும் போது வழியில் சந்தித்துக் கொண்டார்கள். ஒன்றிரண்டு வார்த்தைகளில் அவனைப் பற்றித் தெரிந்து கொண்டாள். பதிலுக்கு அவன் அவளது பெயரை மட்டும் கேட்ட றிந்தான்.

மஞ்களா... அவனுக்குப் பிடித்திருந்தது.

சேது சொன்னதை முதலில் யாரும் ஏற்றுக் கொள்ளவில்லே. பொன்னன் மனைவி நேரடியாகச் சண்டைக்கு வந்தாள்.

''இதென்ன புதுசா வரிசைக் கணக்கு. இங்க அதெல்லாம் ஒத்து வராது...''

பொன்னன் அவனுக்குத் தொழில் எதிரி. அவனும் பார்சல் சர்வீஸ் ஆள்தான். ஆனால் இரண்டு பேரின் முதலாளிகளுக்கும் ஆகாது. அதை மனத்தில் வைத்துக் கொண்டுதான் பேசுகிறாளா?

''இப்பவும் வரிசையாத்தான் பிடிக்கி றோம். தகர டப்பா ஓட்டைப் பாத்திரம்னு அடையாளம் வச்சுக்கிட்டு...'' சந்தேகமாக இழுத்த சில பெண்டுகளுக்கு மட்டும் விளக்கிச் சொன்னான்.

''டோக்கன் முறை நல்லதும்மா... உனக்கு என்ன நம்பர்னு முதல்லியே தெரி யும். அந்த நேரத்துக்கு வந்தாப் போதும். இங்கே நின்னு நேரத்தை வீண் பண்ண வேணும்...''

''அட பரவாயில்லையே...?''

''இப்படிக் கூட உண்டா?''

''என்னவோப்பா... எங்களுக்குத் தண் ணீர் கிடைச்சா சரி...''

பொன்னனின் மனைவி மட்டும் இன்னும் அதே பிடிவாதத்தில் இருந்தாள்.

''எல்லாரும் ஏத்துக்கிட்ட பிறகு என்ன கெடக்கு? ஒண்ணாந்தேதியில் இருந்து டோக்கன் முறைதான்'' சேது கண்டிப் பாகச் சொன்னான்.

''நான் ஒத்துக்க மாட்டேன். நாளைக்கு என் புருஷனையும் கூட்டிட்டு வர்றேன்.''

மறுநாள் — பொன்னனின் மனைவி வந்தாள். எந்தக் கணக்கும் இல்லாமல் இடையில் குடத்தைக் கொண்டு போய் நீட் டினாள்.

''டோக்கன் வாங்கினாத்தான் விட முடி யும்...''

''நிஜமாவா?''

''ம்...''

''ஏய்யா... இங்க வா... என்னன்னு கேளு...''

எங்கிருந்தோ பொன்னன் வந்தான். வரும் போதே கர்ஜனை. ''குடத்தை வையிடி... எவன் தடுக்கிறான்னு பார்ப்பம்...''

சேதுவுக்குக் கோபம் வந்துவிட்டது.

''நல்லது செஞ்சா ஏத்துக்கத் தெரி யணும். இல்லேன்னு அதைக் கத்துத் தர வேண்டியதுதான் வரும். நீ மட்டும்தான் ஆம்பளையா...? குடத்தை வச்சுப் பாரு தெரி யும்...''

வேட்டியை மடித்துக் கட்டிக் கொண் டான். அவள் குனிந்து வைக்கப் போன குடத்தைக் காலால் உதைத்து உருட்டினான். வாய்த் தகராறு ஆனது. பின்பு கைகலப்பு நடந்தது. சேது அவனைத் தூக்கி உதறியதில் பொன்னன் கீழே விழுந்தான். மண்டை உடைந்தது. இரத்தம் கொட்டும் வெளிக் காயம்!

முதலாளி பொன்னனைக் கொம்பு சீவி விட்டார். சட்டம் சேதுவைப் பிடித்துக் கொண்டது. போலீஸ், கோர்ட்டு, விசா ரணை என என்னென்னவோ நடந்து, கடைசியில், ''குற்றம் ருசுவானதால் மூன்று மாதம் கடுங்காவல் தண்டனை விதிக் கிறேன்...'' என முடிந்தது.

சேது பஸ்ஸை விட்டு இறங்கினான்.

முதலில் வீடு — அம்மா — பிறகு மஞ்சுளா — வெங்கிடு — முதலாளி.

அட்டவணையை முதலில் உடைத்தது வெங்கிடுதான்.

''சேது... டேய்...''

தேரடியை நெருங்கும் போது, ஓடி வந்தான்.

வெங்கிடுவின் கையைப் பற்றிக்கொண்டு முடிந்த வரை வேகமாக நடந்தான். சொந்தத் தெருவிற்குள் நுழையும்போது கூசியது. தன் மீது துடைக்க முடியாத அசிங்கம் ஒட்டிக் கொண்ட மாதிரியும், துர்நாற்றம் வீசுகிற மாதிரியும்...

இனி பழைய சேதுவாக யாரும் நினைப்பார்களா? அல்லது இருபுறமும் போலீஸ் வர, வேனில் ஏறிய சேதுதான் ஞாபகத்திற்கு வருமா? ''தெரியாதா உன்னை?'' என உள்ளுக்குள் சிரிப்பார்களா?

ஒதுங்கு. எல்லோரிடமிருந்தும் ஒதுங்கிவிடு. அம்மாவும், மஞ்சுளாவும், ஒன்றிரண்டு சிநேகிதர்களும் போதும் உனக்கு.

''மஞ்சுளா எப்படி இருக்கு?'' வீட்டை நெருங்கும்போது மெதுவாக விசாரித்தான்.

''எந்த மஞ்சுளா?''

''வாத்தியார் மகள். •தெரியாதா உனக்கு?''

வெங்கிடு தயங்கினான். பிறகு நிதானமான வார்த்தைகளில், ''அவுங்க ஊரைக் காலி பண்ணிட்டுப் போயாச்சு...'' என்றான்.

''என்னது?''

''நம்ம ஜனங்களைத் தெரியாதா? உங்க விஷயம் எப்படியோ தெரிஞ்சு போச்சு. ஊதி ஊதிப் பெரிசாக்கிட்டாங்க. அவுங்க அப்பன் அந்தப் பொண்ணை அடிச்சு நொறுக்கினாரு. அடுத்த வாரமே மாற்றல் வாங்கிட்டுச் சொந்த ஊருக்குப் போயிட்டாரு. அங்கே எவனுக்கோ ரெண்டாந்தாரமாக் குடுத்திருக்கிறதாப் பேச்சு...''

சேதுவுக்குக் கண்களை இருட்டியது.

இதற்காகவா இத்தனை பாடு? அவமானம்? வாழ்க்கையைப் பணயம் வைத்தது?

கடவுளே!

அம்மா அன்று முழுவதும் அவனை வெளியே விடவில்லை. முதலாளியைப் பார்க்க வெங்கிடு கூப்பிட்டதற்குக் கூட, ''நாளைக்குப் போகலாம்'' என்று தடுத்து விட்டாள்.

சேதுவுக்கு தோஷம். வேண்டியிருந்த சாமிகளுக்குப் பரிகாரம் செய்த பின்பு எங்கேயும் போவதுதான் நல்லது.

குளிக்க வைத்து, கோயிலுக்கு, ஜோசியர் வீட்டிற்குக் கூட்டிப் போய், பரிகாரச் செலவு செய்து, விருப்பமானதைச் சமைத்துப் போட்டு. முதலாளி மீண்டும் சேர்த்துக்கொள்வாரா என அவன் கவலைப்பட, ''இருக்கட்டும். அதனால் என்ன செத்தா போயிடுவோம். அவரு இல்லேன்னா இன்னொருத்தரு'' எனச் சமாதானம் கூறி...

சேது ஆச்சரியப்பட்டான். புது அம்



''எனக்கு மின் வாரியத்திலிருந்து இண்டர்வியூ வந்திருக்கு...''

''எனக்கு மீன் வாரியத்திலிருந்து..''

மாவா? சம்பளம் இரண்டு நாள் தாமதமாக வந்தாலே புலம்புவாளே! சோதனைகளைத் தனி ஆளாகச் சமாளித்துப் பழகியதில் நிறைய மாற்றம் ஏற்பட்டிருக்கிறது போலும்.

மஞ்சுளாவும் மாறிவிட்டாள். இல்லாமல் இரண்டாம் தாரக் கிழவனுக்கு ஏன் சம்மதிக்கிறாள்?

எவ்வளவு சுலபமாக இவையெல்லாம் நிகழ்ந்து விடுகின்றன?

அம்மா நிறையப் பேசினாள்.

அவன் கஷ்டப்பட்டது — உதவி செய்தவர்கள் — செய்யாதவர்கள் — ஊர் நடப்பு...

''அந்த நாசமாப் போனவன்... உன்னைக் கெடுத்தானே பொன்னன். இப்ப ஆஸ்பத்திரியில் கெடக்கான். வயித்துல ஏதோ கட்டியாம். ஆபரேஷன் பண்ணி இருக்கு. மகமாயி கூலி கொடுத்துட்டா...''

''பாவம்மா... முதலாளி தூண்டி விட்டதுக்கு இவன் என்ன பண்ணுவான்?''

''காரியத்துல இறங்கினது இவன் தானே...''

''தூண்டி விட்டவன் நல்லாத்தானே இருக்கான்... ஒன்னும் ஆகலையே?''

அம்மா பதில் சொல்லவில்லை.

திடீரெனச் சேதுவுக்கு, தான் — மஞ்சுளா — பொன்னன் எல்லோரும் ஒரே நேர்க்கோட்டில் வருவதைப் போல இருந்தது.

கஷ்டங்கள், தெய்வ சோதனை எல்லாம் ஏன் இப்படி ஒரே தளத்திலேயே மையம் கொள்கின்றன?

அம்மா அவனுக்குச் சந்தோஷத்தைத் தருகிற இன்னொரு செய்தியையும் சொன்னாள். ''இப்பல்லாம் நீ சொன்ன மாதிரி டோக்கன் வச்சுத்தான் தண்ணி விடறாங்க. அதுக்குன்னு ஓர் ஆளையே போட்டிருக்கு...''

சேது தனது கேள்விக்கான பதிலை யோசித்துக் கொண்டிருந்ததால் அவள் எதிர்பார்த்த சந்தோஷத்தை அவனால் காட்டிக் கொள்ள முடியவில்லை.





# தர்ம தேவதை

"எல்லாக் கொழந்தைங்களும் சாப்டீங்களா?"

"இன்னிக்கு என்ன கதைத் சொல்லப் போறே பாட்டி?"

"கதைன்னு உங்களுக்கெல்லாம் சாப்பாடு வேணும், தூக்கம் வேணும்... ம்... காலம் அப்படி மாறிப் போய்டிச்சி... இன்னிக்கு நான் உங்களுக்குத் தர்ம தேவதை கதை சொல்லப் போறேன்... இந்தக் கதையில அந்த ராதிகாதான் ஈரோயினு. ஷரத்பாபு ராதிகாவோட புருஷங்காரன். இந்தம்மா இன்ஸ்பெக்டரு. அவரு தொழிலாளி. யூனியன் லீடரு... என்ன ஆவுதுன்னு... ஜெய்கணேசு ஒரு பாக்டரி மொதலாளி. அவரு கிட்ட வேலை செய்யற ஷரத்பாபு தொழிலாளிங்களுக்காக மொதலாளிகிட்ட அடிக்கடி சண்டை போடறாரா. அதனால மொதலாளி அவரை வெஷம் வெச்சி சாவடிச்சிடறாரு. இன்ஸ்பெக்டரம்மாவால ஜெய்கணேஷ் கிட்ட இருக்கிற பணத்தோட மோத முடியாததால ஒண்ணுஞ் செய்ய முடியலை. கடைசியில என்ன ஆவுதுன்னு...

"நிறுத்து பாட்டி... நீ சொல்றதைப் பாத்தா நல்ல கதையா இருக்கும் போல இருக்குதே. முழுக்கச் சொல்லாதே... நாங்களே பாத்துக்கறோம்..! விஜய்காந்த் எப்படி ஆக்ட் பண்ணியிருக்காரு பாட்டி?"

"மதுரைக்காரரா? அவரு வந்தாலே சண்டைதான். சண்டையை விட்டா அந்தப் புதுப் பொண்ணு பல்லவியோட 'தொடு... தொடு'ன்னு பாட்டுப்பாடிக்கிட்டே டான்ஸ். அந்த டியூன் நல்லா இருக்குது. அப்புறம் டிஸ்கோ சாந்தி பாடுதே... இது நட்ட நடு ராத்திரின்னு... அதுவும் நல்லா இருக்குது. அந்தப் பொண்ணு ஆடறதுதான் எளசுங்களுக்குப் புடிக்குமோ என்னவோ, எனக்குப் புடிக்கலை. அப்புறம் என்ன சொல்றது?... டபுள் ஸ்டேட்மெண்ட்டு கதிரேசன்னு நம்பியார் வராரு. எங்காலத்து ஆளு. இன்னும் பெருங்காய வாசனை போவலை. அந்தப் புள்ளாண்டான் ஒய். ஜி. மகேந்திரன் காந்தியையும், கதிரேசனையும் வெச்சி ஜோக் அடிக்குது பாரு... கோட்ஸே சுட்டானே, காந்தின்னு நெனைச்சி கதிரேசனைச் சுட்டிருக்கக் கூடாதான்னு... நானே பொக்கை வாயைக் காமிச்சிச் சிரிச்சிட்டேன்... மத்தபடி ஒண்ணும் ஜோக்கெல்லாம் சொகமில்லை. ராதிகா நல்லா ஆம்பிளை மாதிரி தடக் தடக்னு போவுது. வருது. புருஷங்காரன்

கண்டுவிரல்ல அடி பட்டுக்கிட்டான்ன வுடனே இன்னு பதறுது. அப்புறம் அதே ராதிகா காக்கிச் சட்டையை மாட்டிக்கினு புருஷங்காரனேயே சொத்துனு அடிக்குது பாரு... ச்ச்... 'நல்லா ஆக்ட் குடுத்திருக்குது. டைரக்டரு முத்துராமன் இல்ல! சீராப் பண்ணியிருக்காரு... அந்த ஊர்கோலம், கடைசியில பாழடைஞ்ச கோட்டையில வெச்சி நடக்கற அந்தக் கொலே... இவ்வளவு உப்பு, இவ்வளவு புளி... இவ்வளவு மொளகாத்தாளுன்னு, எது எப்படி கலக்கணுமோ அப்படி சரியாக் கலந்திருக்கிறாரு... என்னு ஒண்ணு, புது ஆளு ஒருத்தரு வராரு... ஞான சுந்தரமோ என்னவோ பேரு படத்தில... அவரு கொரலு அப்பா... இரும்புத் தகட்டை அறத்தால் ராவுற மாதிரி சகிக்கலே போங்களேன்... மொத்தத்தில பாட்டு, சண்டை, கதைன்னு கலந்து வுட்டிருக்கிறதால உக்காந்து பாக்க முடியுது...

---

"அடுத்த கதை பாட்டி... அடுத்த கதை பாட்டி..."

"சொல்றேன்... சொல்றேன்... புதிய பூவு இதுன்னு ஒரு படம்... செந்திலு, கோவை, சரளா, ரம்யாகிருஷ்ணன், ராஜான்னு எளசுங்க நடிச்ச படம்..."

"செந்திலா பாட்டி... ஹை... ஜோக்கெல்லாம் நெறைய இருக்குமே..."

"ஹக்காங்... இருக்குது... செந்திலு சம்சாரந்தான் சரளா. அந்தச் சரளாவுக்கு ஒரு தங்கச்சி. அது அக்காளைத் தேடிக்கிட்டு வருது. செந்திலு சம்சாரத்தை வுட்டுட்டுச் சம்சாரத்தோட தங்கச்சியைப் பாக்க ஆரம்பிக்கிறாரு..."

"இந்தச் சக்களத்தி விவகார ஜோக்தானே பாட்டி... அதான் ஒங்காலத்திலேர்ந்தே வருதே... புதுசா ஏதாவது ஜோக் இருக்குதா... சொல்லேன்."

"ஒரு ஸ்கூலாம்.. அங்க ஒரு வாத்தியாராம். ஸ்கூலுக்கு ஒரு இன்ஸ்பெக்டரு வந்து ஜனகரு வில்லே ஒடிச்சது யாருன்னு கேக்குறாராம்..."

"நிறுத்து பாட்டி... நான் ஒடிக்கலே நான் ஒடிக்கலேன்னு பையன் மொதக் கொண்டு ஹெட்மாஸ்டர் வரைக்கும் சொல்லுவாங்களே, அதானே?"

"சரியாச் சொல்லிட்டியே... ஒனக்கு எப்படித் தெரியும்?"

"இது எல்லா பத்திரிகையிலயும் வந்திருச்சி பாட்டி!"

"அப்புடியா...? இன்னொண்ணு சொல்றேன்... துக்கம் வெசாரிக்கக் கெளம்புறாம் ஒருத்தன்."

"அட, அம்மாவுக்குப் பதிலா பெண்டாட்டின்னு மாத்திப் போட்டுப் பேசறதுதானே? இதுவும் எல்லாப் பத்திரிகையிலயும் வந்திருச்சு. கதையிருந்தா சொல்லு; இல்லேன்னு நடையைக் கட்டு பாட்டி!"

"சரிடாப்பா... சொல்றேன். ஓர் அடங்காப்பிடாரிவயசுக்குவந்தப்புறங்கூட நாலாங் கிளாசோ அஞ்சாங்கிளாசோ படிக்கிறா. அந்த அடங்காப்பிடாரிக்கு வர்ற வாத்தியாருதான் படத்தோட ஈரோ. அந்தப் பொண்ணு பரீட்சையில காப்பி அடிக்குதாம். அப்ப அந்த வாத்தியாரு அதை லபக்குன்னு புடிச்சிடுறாராம். 'அடே வாத்தி, என்னேக் காப்பியடிக்கறப்ப புடிச்சிட்ட இல்லே? உன்னைப் பழிக்குப் பழி வாங்கறேம் பாரு'ன்னு ஈரோயினு சவால் விடுதாம். இந்த எடத்தில இண்டர்வெல்லு..."

"என்ன பாட்டி இது, நாங்க கதை எழுதுனாக் கூட இன்னுங் கொஞ்சம் நல்லா எழுதுவோமே..."

"கேளேன். இண்டர்வெல்லுக்குப் பின்னாடி 'அந்த வாத்தியாரு என்னைக் கெடுத்துட்டாரு'ன்னு இது சொல்ல, வாத்தியாரு அதே பொண்ணைக்கட்டிக்க, அந்தப்பொண்ணுக்கு ரத்தத்தில " புத்துன்னு பொண்ணோட அண்ணங்காரன் அழ, ஒரே கூத்துதான்! கடைசியில அந்தப் பொண்ணுக்கு ரத்தத்தில புத்து இல்ல, டாக்டரு ரிப்போர்ட்டை மாத்திக் குடுத்துட்டாருன்னு குமுதத்தில ஒரு கதை வந்தது முன்ன ஒரு நாளு, அந்தக் கதை கணக்கா இந்தக் கதையை ஓடவுட்டுக் கடைசியில சுபம்னு முடிச்சிடுறாங்கோ...! என்னு... புதுசா அறிவுமணின்னு ஒரு தம்பி, 'நீராடும் தாமரையே'ன்னு பாட்டு எழுதியிருக்குது. அது பரவாயில்லே. அப்புறம் கண்ணன் — லதான்னு ரெண்டு பேரு சேந்து சங்கீதம் போட்டிருக்காங்க. அதுவும் பரவாயில்லே. மத்தபடி என்னமோ விளையாட்டுப் புள்ளேங்க படம் புடிச்ச மாதிரி இருக்கு... சரி,.. வீட்டுக்குப் போய்த் தூங்குங்க. அடுத்த வாரம் பாப்போம்."

— ஜெயமன்மதன்



# புதிய பூவிது

## 5

நந்தகுமார் பின் மண்டையில் அடி வாங்கினவன்போல் பார்த்தான். இந்திரா அவனைத் தன்னோடு சேர்த்து இறுக்கிக் கொண்டாள்.

''அண்ணா, நந்து இத்தனை நாள் ஸ்கூலுக்குப் போய்ட்டிருந்தான். வீட்ல சும்மா இருக்கிறதுன்னா....

''இத பாரு இந்திரா, பொழுது போவணும்னா நந்து எங்கூட கடைக்கு வரட்டும். கூடமாட ஒத்தாசையா இருக்கட்டும். தனியாளா நானும் தவிச்சிட்டிருக்கேன். சோப் காய்ஞ்சி போச்சு பாரு'' என்று கன்னத்துச் சோப்பிற்குக் கவலைப்பட்டான். கண்ணாடியை நாடிப் போனான்.

இந்திரா அங்கிருந்து மௌனமாக விலகினாள். சுகந்தி ஏதோ ஒரு தட்டில் போட்டு நீட்டிய ஏதோ உணவை விழுங்கினாள். நந்தகுமார் இழுத்து இறைத்த தண்ணீரில் ஒவ்வொருதுணியாகக்கசக்கினாள்.எண்ணெய்ப் பிசுக்கும், தீற்றிக் கொண்ட பருக்கைகளுமாய் வந்து விழுந்த பாத்திரங்களைத் தேய்த்துக் கழுவினாள்.

குளித்துவிட்டு அபாரமான கூந்தலை உதறியபோது, நந்தகுமார் பின்னால் வந்து நின்றான். நழுவிய டிராயரை இழுத்துவிட்டுக் கொண்டான்.



''அம்மா!''

''என்ன நந்து?'' இந்திரா பட்டென்று திரும்பியபோது, கூந்தலிலிருந்து, சூரியக் கதிர்கள் ஊடுருவிய நீர்த்துளிகள் விர்ரென்று நந்தகுமாரின் முகத்தில் பன்னீர் தெளித்தன.

''நான் பின்னி விடட்டுமாம்மா?''

''ஆம்பிளைப் பிள்ளை. உனக்கெதுக்குடா இந்த வேலையெல்லாம்?''

நந்தகுமார் பதில் சொல்லாமல் அம்மாவின் கருங்கூந்தலை இரண்டு கைகளிலும் அள்ளி, மூன்று கால்களாகப் பிரித்துக் கொண்டான். அந்த வழுவழுப்பு கையில் ஒரு கருநாகத்தைப் பிடித்திருந்த அனுபவத்தைக் கொடுக்க —

''அம்மா, நான் ஒண்ணு சொன்னா கோச்சுக்க மாட்டியே?''

''என்ன நந்து?''

''மாமா கடைல நான் வேலைக்குப் போறேம்மா. சம்பளம் கொடுப்பாரு இல்ல?''

இந்திரா பிரமித்துப் போய்த் தலையை உலுக்கி இழுத்துக் கொண்டாள். கண்களில் ஈரத்தின் மினுமினுப்பு.

''நீ எதுக்குடா வேலைக்குப் போகணும்? நான் போறேன் வேலைக்கு. மாசாமாசம் சம்பளம் கொண்டு வந்தா யாரும் வாயைத் திறக்க மாட்டாங்க. நீ ஜம்முன்னு ஸ்கூலுக்குப் போகணும். முதல் மார்க் வாங்கணும். செய்வியா.... ம்.... செய்வியா?''

இந்திரா லேசாக ஹிஸ்டீரியா நிலை வரை சென்று கேட்ட, அந்த 'ம், செய்வியா' நந்தகுமாரை இயந்திர ரீதியாகத் தலையாட்ட வைத்தது.

''உனக்கென்ன பைத்தியம் பிடிச்சிருச்சா?'' ஜெயபால் ஊசி குத்தப்பட்ட பலூன் போல வெடித்தான். ''இந்த ஊர்ல எவன் உனக்கு வேலை தருவான்?''

இந்திரா தூணைப் பிடித்துக் கொண்டு நின்றாள். நந்தகுமார் தூணுக்குப் பின்னால். சசிகலா படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை மூடிவிட்டு வேடிக்கை பார்க்கத் தொடங்கினாள். கூடத்தில் குழல் விளக்கு லேசாகச் சிரித்துக் கொண்டிருந்தது.

''எப்படியாவது எனக்கொரு வேலை வாங்கிக் கொடு அண்ணா'' இந்திரா முடிப்பதற்குள் வாசல் கேட் திறக்கப்படும் 'கீய்ங்க்' கேட்டு, இவர்கள் வாசல் பக்கம் பார்வையைத் திருப்ப, பாண்டியன்!

முதல் நாள் போலவே கட்டம் போட்ட லுங்கி. சட்டைக் காலருக்குச் சிநேகிதமாய் கழுத்தில் ஒரு கைக்குட்டை.

''ஒரு ஆள் குறையுது சட்டசபைல?'' என்றான். சிரித்தான்.

''யாரு?'' என்றான் ஜெயபால்.

''சசியோட அம்மா?''

''கோயிலுக்குப் போயிருக்கா.''

''அப்ப எனக்குக் காப்பி கெடையாது?''

''ஏன் இல்லாம? இந்திரா ரெண்டு காப்பி எடுத்துட்டு வா.''

இந்திரா காப்பி டம்ளர்களைக் கொண்டு வந்து பாண்டியனிடம் நீட்டியபோது ''எப்படி இருக்கும்மா நம்ம ஊரு?'' என்று கேட்டான் பாண்டியன். இந்திரா ஜெயபாலைப் பார்த்தாள். புடைவையில் இருந்த கிழிசல்



பாண்டியன் கண்ணில் படக்கூடாது என்ற முனைப்போடு சற்றே நெளிந்து நின்றாள்.

''அதை ஏன் கேக்கறே?'' ஜெயபால் குறுக்கில் வெட்டினான். ''இவ வேலைக்குப் போகணுமாம்.... ஆசைப்படறா.''

''வேலைக்குத்தானே.... போனாப்போவுது. நம்ம ஊர்லதான் பொம்பளைங்களுக்குன்னு ஸ்பெஷலா வேலை காத்திட்டிருக்கே. சேர்த்து விட்டாப் போச்சு!''

''ஐயோ, எனக்கு டைலரிங், எம்ப்ராய்டரி, கூடை பின்றது எதுவும் தெரியாதே'' என்று இந்திரா கவலையோடு சொன்னாள்.

''அதெல்லாம் தேவையில்லே. சுலபமான வேலை. தீப்பெட்டி தொழிற்சாலையில. என்ன செய்யலாமில்ல?''

''நந்துவையும் ஸ்கூல்ல சேர்க்கணும்'' என்றாள் இந்திரா.

''கவர்ன்மெண்ட் ஸ்கூல் இருக்கே. படிக்க ஆளு இல்லாம தவிச்சிட்டில்ல இருக்கு. எப்ப வேணாலும் சேர்த்துக்கலாம். பீஸ், டொனேஷன்னு பைசா செலவில்ல.''

தூணுக்குப் பின்னால் நந்தகுமார் ஒரு சந்தோஷத் துள்ளல் துள்ளியது. கவனிக்கப் படாமல் போக. ''அண்ணா நீ என்ன சொல்றே?'' என்று ஜெயபாலிடம் கேட்டாள் இந்திரா.

''பரவாயில்லையே.... முடிவெல்லாம் நீங்களே செய்ஞ்சப்புறம் என்கிட்டே சொல்லணும்னு நெனைச்சியே.... அதுவே பெரிசு.''

இந்திரா கொஞ்சம் தயக்கத்துடன், கொஞ்சம் பரவசத்துடன் (வேலை கிடைக்கப் போகிறது) கொஞ்சம் பயத்துடன் அந்த கேட்டைப் பார்த்தாள். கேட் விரோதமாக மூடியிருந்தது. கேட்டுக்கு அந்தப் பக்கம் காக்கிச் சட்டை பீடி பிடித்துக் கொண்டிருந்தது. உள்ளே பசுமை. வளைந்து வளைந்து சென்றபாதை. "நான் காட்டுகிறேன் வீட்டை" என்று ஆணவமாகச் சொன்னது.

வீடா அது? ஆற்காட்டு நவாபின் அரண்மனை என்றால் நம்பலாம் போல இருந்தது. கறுப்புப் பளிங்கில் அங்கங்கே ஒத்தடம் கொடுக்கப்பட்டிருந்தது. போர்ட்டிகோ. கார். வீட்டை முழுக்க முழுக்க அணைத்துக் கொண்டு மரங்களின் நிழல்.

காக்கிச்சட்டை இவர்களைப்பார்த்தவுடன் எழுந்து வந்தான். தரையில் நெளியும் மண் புழுக்களைப் பார்ப்பது போல் பார்த்தான். புருவங்களை மேலேற்றினான்.

பாண்டியன் இந்த அந்நியத் தன்மைகளுக்குப் பரிச்சயப்பட்டவன்.

''முதலாளியைப் பார்க்கணும்'' என்றான்.

காக்கிச் சட்டை பாண்ட் பாக்கெட்டிலிருந்து ஒரு கற்றை வெள்ளைத் தாள்களை உருவி அதில் ஒரு தாளை உருவி. ''எழுதிக் கொடு'' என்று நீட்டினான்.

எழுதிக் கொடுத்துவிட்டு ஐந்து நிமிடங்கள் காத்திருக்க வேண்டியிருந்தது.

''இதெல்லாம் இல்லேன்னா கண்டவங்க உள்ளே நுழைஞ்சிடுவாங்க'' என்றான் பாண்டியன். குரல் தோற்றுப் போன குரல் போல் இருந்தது.

இந்திரா பதில் சொல்லாமல் அந்த இடத்தை உற்று நோக்கினாள்.

அவளுக்குப் பெயர் தெரியாத மரங்கள் எல்லாம் நின்றிருந்தன. மரங்களில் பறவைகள் இளைப்பாறின. பசியாறின. சிவப்பு அலகுடன் பச்சைக் கிளிகள் அவற்றுக்கே பிரத்யேகமான பாஷையில் ஊடிக் கொண்டன. ஒரு கிளி விர்ரென்று மேலே எழுந்து படபடவென்று சிறகடித்துச் செங்குத்தாக இறங்கியது. சற்றுத் தள்ளி ஆள் உயரத்திற்குச் செடிகள். பூக்கள். பச்சை, நீலம், கருநீலம், மஞ்சள், சிவப்பு, கறுப்பு. ரோஜா கறுப்பாகக் கூடப் பூக்குமா என்ன? இதோ பூத்திருக்கிறதே! வேலை கிடைக்காவிட்டாலும் ஒரு நாளாவது நந்தகுமாரை இந்த இடத்திற்கு அழைத்து வந்து இயற்கையின் இந்த பெயிலிங்களைக் காண்பிக்க வேண்டும். வேலை கிடைக்குமா?

''உங்களைக் கூப்புடுறாரு.''

காக்கிச் சட்டை அகலமாகக் கேட்டைத் திறந்தான்.

''வாங்க'' என்று பாண்டியன் முன்னால் நடந்தான்.

இந்திரா புடைவையின் தலைப்பை முடிச்சு, முடிச்சாகப் போட்டுக் கழற்றிக் கொண்டு அவன் பின் போனாள்.

தூரத்தில் தெரிந்த போர்டிகோ நெருங்கியது. ரத்த நிறத்தில் ஒரு கார் நின்றிருந்தது. எந்த தேசத்துக் கார் என்று தெரியவில்லை. அதன் உட்புற மெத்தைகள் தெரிந்தன. ஒரே ஒரு ஊதுவத்தி நெருப்புக் கொண்டையுடன். அதன் புகை நேர்க்கோடு போல் மேலே செல்ல, வரவேற்கும் வாசனை.

ஒரு பத்துப் படிகள் அவளை மேலே 'வா' என்றன. கறுப்புப் படிகள். படிகளில் அவள் முகம் தெரிந்தது. விபூதிக் கீற்று தெரிந்தது. புடைவையின் தலைப்பைமுடிச்சுப்போடுவது தெரிந்தவுடன் விட்டுவிட்டாள்.

பக்கத்தில் பாண்டியன். கழுத்தில் நாய்ப் பட்டை போல் இருக்கும் கைக்குட்டை இல்லாதது கண்டு லேசாகச் சிரிப்பு வந்தது. படிகள் முடிந்தவுடன் வலது பக்க அறை தெரிந்தது. அறையின் கதவு மெத்தென்று சாத்திக்கொண்டிருக்க. ''யாரு பாண்டியன். நம்ப சூபர்





''போன வாரம்தானே உன்னை ரிலீஸ் பண்ணினோம்? அதற்குள் மாட்டிக்கிட்டியே?''

''வீட்டுச் சாப்பாடு என் உடம்புக்கு ஒத்துக்கொள்ளலை சார்!''

வைசருதானே?'' என்ற குரல் வழிந்தது.

''மொதலாளி குரல்'' என்றான் பாண்டியன். முதலாளி குரல் சன்னமாக இருந்தது. அந்தக் குரலில் 'யாமிருக்க பயமேன்' இருந்தது.

இருவரும் கதவிற்கு அருகில் நிற்க, சடாரென்று கதவு திறந்து ஒரு மீசையும், இரண்டு கண்களும் தெரிந்தன.

''உள்ளே வாங்க. ஐயா காத்திட்டிருக்காரு.''

கதவுக்கு வெளிப்புறம் மூன்று ஜோடி செருப்புகள், சொந்தக்காரர்களுக்காகக் காத்திருந்தன. பாண்டியன் தனது செருப்புகளை உதறினான். இந்திரா செருப்புகளை உதறுகையில் அன்னம் போல மேல்பட்டையில் வேலைப்பாடுடன் கூடிய ஜோடியைப் பார்த்தாள். புதிதாக இருந்தது. அது உருவாகும்போதே உள்ளே இருக்கும் முதலாளிக்காக என்று உருவாகி இருக்கலாம். அதற்குப் பக்கத்தில் தனது தேய்ந்த செருப்பை விட வெட்கப்பட்டாள்.

''உள்ளே வாம்மா'' என்ற வரவேற்புக் குரல் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்தாள், அவர் அங்கிருந்தே அழைத்தார்.

உடலை நடுக்கம் உருவிவிடச் சட்டென்று செருப்புகளைத் துறந்துவிட்டு அந்த அறைக்குள் நுழைய, குளிர் அவளைப் பொத்தி அணைத்து உள்வாங்கிக் கொண்டது.

சுவரில் தொங்கிய சுவாமி படங்களுக்குக் கீழே அவர் அமர்ந்திருந்தார். அவருக்கு வயது ஐம்பதிற்கு அருகில் இருக்கும். சிக்கனமாக முடி வைத்திருந்தார். நெற்றியில் சுருக்கங்கள் இல்லை. விபூதிக்கீற்றுகள் நெற்றித் துவக்கத்திலிருந்து இறுதிவரை. நடுவில் சந்தனம். அதில் குங்குமம். நேரே வேங்கடாஜலபதியிடம் பேசிவிட்டு வந்து அமர்ந்த மாதிரி இருந்தார்.

''என்ன விஷயம்?'' என்றார். லேசாக மீசையை வருடி ஒரு திருகு திருகினார். அதில் கம்பீரம் இருந்தது.

''இவங்களுக்கு நம்ப பாக்டரியில ஒரு வேலை போட்டுத் தரணும்.''

''இது யாரு? உனக்குத் தெரிஞ்சவங்களா?''

''ஆமாங்க. சமீபத்தில வீட்ல துக்கம் நடந்து போச்சு.''

''ச்... ச்.''

இந்திராவை லேசான அவமானம் தாக்கியது. 'என் நிலையைப் பார், என் நிலையைப் பார்' என்று எத்தனை பேரிடம் சுய விளம்பரப்படுத்திக் கொள்ள வேண்டியிருக்கிறது.

''ரத்தினம்...''

ரத்தினம் என்று அழைக்கப்பட்ட அந்த மீசை, ''ஐயா'' என்றான்.

''ஏதாவது வேலை இருக்குமா?''

''இருக்குங்க.''

முதலாளி மறுபடி இவர்கள் பக்கம் திரும்பி, திருப்தியாய்த் தலையை ஆட்டினார். இந்திராவை முதல்முறையாக நேராகப் பார்த்தார்.

''அம்மா, நீ யாரு, என்னென்னு எனக்குத் தெரியாது. ஆளு வேலை இருக்கான்னு கேட்டவுடனே, ரத்தினம் 'பட்டுனு இருக்குன்னு சொன்னும்பாரு. அதான் நல்ல சகுனம். பாண்டியன் சிபாரிசுன்னு எனக்கு ஆளைப் பத்திக் கவலை இல்லை வெள்ளிக்கிழமையிலேர்ந்து வேலைக்கு வந்துடு. அன்னிக்குத்தான் நாள் நல்லா இருக்கு'' என்றார். பாண்டியன் பக்கம் திரும்பி, ''மத்ததெல்லாம் உனக்கே தெரியுமில்ல.... ஃபாக்டரிக்குக் கூட்டிட்டுப் போய்ச் சரியானவங்ககிட்ட சொல்லிச் சேர்த்துடு'' என்றார்.

''சரிங்க'' என்று எழுந்து கொண்டான். இந்திராவை ஜாடையால் எழுப்பினான். வெளியில் வரும்போது இந்திராவிற்குக் கண்ணில் நீர்த் தளும்பியது. உலகம் இவ்வளவு பரந்த மனப்பான்மை மனிதர்களையெல்லாம் இன்னும் தன்னுள் வைத்திருக்கிறதா, என்ன?

அவளுக்கு உடனே நந்துவைக் கட்டிப் பிடித்துக் கொள்ள வேண்டும் போல் இருந்தது.

ரத்தினம் கதவை நன்றாக அழுத்திச் சாத்தினான்.

மாயகிருஷ்ணன் எழுந்து கொண்டார். அபாரமான உயரத்தில், பார்த்தால் அசோக மரம் போலத் தெரிந்தார். மீசையை வருடிவிட்டார். அறையின் கண்ணாடிச் சதுரம் வழியாக வெளியே பார்க்க இந்திரா தெரிந்தாள். மிதப்பது போல் சென்றாள். அந்தப் பின்னல், மிக லேசாகத் தெரிந்த ப்ராப்பட்டை, சின்னச் சின்ன அரை வட்டம் போட்ட அந்த இடை —

பெருமூச்சுவிட்டார்.

''எப்படிரா இருக்கு?'' என்றார், இந்திரா மேல் வைத்த கண்ணை எடுக்காமல்.

''பெங்களூர்த் தக்காளிங்க, சிம்லா ஆப்பிளுங்க, ஊட்டி....''

''சத். சரியான தீனிப் பண்டாரண்டா நீ. வெள்ளிக்கிழமை வரச் சொல்லியிருக்கேன். அறுத்தவ. ஒண்ணும் கஷ்டம் இருக்காது. எதுக்கும் நீ நல்லா விசாரி. விசாரிக்கறது வெளியே தெரிஞ்சது, நோண்டிப்புடுவேன்'' என்றார்.

''ஆகட்டுங்க.''

மாயகிருஷ்ணன் சுவரில் பதிக்கப்பட்டிருந்த அலமாரியைத் திறந்து அலங்காரமான பாட்டிலை எடுத்து, அலங்காரமான க்ளாஸை எடுத்து, அதில் இரண்டு விரற்கடை மேல் நாட்டுச் சாராயத்தைச் சரித்துக் கொண்டார்.

அது இப்போது மிகவும் அவசியமாகப் பட்டது அவருக்கு.

(தொடரும்)

# அப்னா உத்ஸவ்! அவரவர்




















சிலம்பம்


ஹிந்தி திணிப்பு


தமிழ் நாட்டில்
ஊடுருவும் புலிகள்
புலி ஆட்டம்




புலியாட்டம் நல்லாத்தான் இருக்குது!.. ஆனா கையிலே துப்பாக்கி...


தமிழக
இ.காங்கிரஸ்


உறியடி
கள், சாராய
விற்பனை
தமிழக மக்கள்



செல்வராஜ்

தஞ்சை பெரிய கோவிலுக்குள் அவர்கள் நுழைந்த போது மாலை மணி ஐந்தாகி விட்டிருந்தது.

புதிதாய்க் கல்யாணமானவர்கள் தேன் நிலவிற்கு காஷ்மீர், சிம்லா என்று போவார்கள், குறைந்தபட்சம் ஊட்டி, பெங்களூராவது இருக்கும். இப்படி மதுரை, திருச்சி, தஞ்சாவூர் என்று க்ஷேத்திராடனம் புறப்பட்ட இளம் தம்பதிகள் இவர்களாகத்தான் இருக்கும்.

''என்ன யோசனை ஜனனி? மணி ஐந்துக்கு மேலாகிறது. கோயிலுக்குள் சுற்றிப் பார்க்க நிறைய இடங்கள் இருக்கும்...'' சுதாகர் சொல்லியபடியே ஜனனியின் கைவிரல்களைத் தன் விரல்களோடு சேர்த்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தான்.

இருவரும் நந்தி பகவானைத் தரிசித்து விட்டுக் கல் படிக்கட்டில் கீழே இறங்கினர்.

திடீரெனச் சுதாகர் ஜனனியிடம் கேட்டான். ''ஜனனி! இரண்டு வருஷங்கள் முன்னடி நீ வேலை நிமித்தம் உன் அம்மாவுடன் திருச்சியில் இருந்த போது எப்போதாவது தஞ்சாவூருக்கோ, இந்தக் கோயிலுக்கோ வந்திருக்கிறாயா?''

கேட்டுவிட்டு, சுதாகர் பிராகாரப் பகுதியிலிருந்த சிற்பக் களஞ்சியக் கூடத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான். ஜனனிக்குக் கணவனைத் தொடர முடியாமல் கால் தட்டி இழுத்தது. கால் மட்டுமா?

அப்போது ஜனனி திருச்சியில் வேலை பார்த்த அலுவலகத்தில் புதிதாய் வேலைக்குச் சேர்ந்தவன் பிரதீப். கவர்ச்சியான தோற்



# சொல்லிவிடுவாரா..?

றம். கலகலப்பான சுபாவம். ஆண் பெண் என்ற வித்தியாசம் பாராட்டாமல் எல்லோருடனும் சகஜமாகப் பழகினான். திடீரென ஒருநாள், "ஜனனி! உங்களோடு நான் தனிமையில் பேசணும்... உங்களுக்கு ஆட்சேபணை இல்லையானால் என்னோடு ஒருநாள் வெளியூர் வரமுடியுமா?" என்றான்.

ஜனனிக்குத் திகைப்பு கலந்த விருப்பம் என்றாலும் தயங்கினாள்.

"நாளைக்குக் காலையில் மெயின் கார்டு கேட் தெப்பக்குளம் பக்கத்தில் வந்து விடுங்கள். அங்கே நான் உங்களுக்காகக் காத்திருக்கிறேன், ப்ளீஸ்!"



ஜனனி பதிலே பேசவில்லை. ஆனால் மறுநாள் பிரதீப் சொல்லிய மாதிரி, மெயின் கார்டு கேட்டில் வந்து காத்திருந்தாள்.

"தாங்க்யூ, ஜனனி!"

முதுகுக்குப் பின்னே குரல் கேட்கவும் மிரண்டு திரும்பினாள்.

பிரதீப்! "போகலாமா?" என்றான்.

"எங்கே?"

"வெளியூர்... இங்கே நாம் நிம்மதியாய்ப் பேச முடியுமா?"

"கஷ்டம்தான். பிரதீப்! எனக்குப் பயமாக இருக்கிறது..."

"பயப்படத் தேவையே இல்லை. சரியாய்ச் சாயந்திரம் ஐந்து மணிக்கு நாம் திருச்சி திரும்புகிறோம். ஜனனி! கார் ரெடி! ஏறிக்கொள்ளுங்கள், ப்ளீஸ்!"

"பிரதீப்! ரொம்ப தூரம் போக வேண்டாம். ஒருவேளை ஏதாவது ஆகி நான் திரும்பி வரத் தாமதமானால் வீட்டில் தனியாய் இருக்கும் என் அம்மா விசனப்படுவாள். அதனால் பக்கத்தில் இருக்கிற தஞ்சாவூர் போகலாம்..."

"தஞ்சாவூரா?" முகம் சுளித்தான் பிரதீப். 'அங்கே போய்; இவளைச் சரிக்கட்டி ஒரு ஹோட்டலுக்கு அழைத்துப் போக வேண்டும். இப்போதே மறுத்துப் பேசினால் என்னைப் புரிந்து கொண்டு பின் வாங்கி விடுவாள்.'

பிரதீப் உள்ளூறத் திட்டம் தீட்டினான்.

தஞ்சை எல்லைக்குள் கார் நுழைகிற போதே ஜனனி தீர்மானமாய்ச் சொல்லி விட்டாள்.

"நான் தஞ்சாவூரில் ஒன்றும் பார்த்ததில்லை. பிரகதீஸ்வரர் கோயில், சரஸ்வதி மஹால், அரண்மனை, பெரிய கோவில் எல்லாம் பார்க்கணும்..."

'பெரிய கோயில் பிராகார நடுவில் இருவரையும் திடீரென மறித்தான் ஒரு பதின்மூன்று அல்லது பதினான்கு வயதுச் சிறுவன். அவன் கையில் பெரிய வெள்ளைத் தாளும் பென்சிலும் இருந்தன.

"ஸார்... ஸார்... கொஞ்சம் நில்லுங்க ஸார்... நான் நல்லா ஓவியம் வரைவேன். முப்பது நிமிஷத்தில் தத்ரூபமாய் உங்களை ஸ்கெட்ச் வரைந்து காட்டுவேன். நான் ரொம்ப ஏழை ஸார்! படிக்க வசதி இல்லாததினால் இந்தத் தொழிலைச் செய்யறேன். இதில் வருகிற வருமானத்தில் என் ஒரே தம்பியைப் படிக்க வைக்கிறேன். ஸார்... தயவு செய்து இந்த ஏழைக்கு உதவி பண்ணுங்க... ஸார்..." என்று கெஞ்சினான்.

"பிரதீப்! அந்தப் பையன் நம்மிடம்

ஷைலஜா

பிச்சையாய்க் கேட்கவில்லை. ஏழைமை காரணமாய்க் கலைத்திறமையை விற்று ஊதியம் கேட்கிறான். இதை நாம் ஊக்குவிக்கணும்.'' என்றாள் ஜனனி.

பிரதீப் அலட்சியமாய்த் தோளைக் குலுக்கினான். அவனுக்கு நேரம் வேறு வழியில் விரயமாவதில் விருப்பம் இல்லை.

''உங்கள் இரண்டு பேரையும் சேர்த்து வரையட்டுமா? சிவபெருமானும், பார்வதி தேவியும் போல் அழகான ஜோடியாகத் தெரிகிறீர்கள்!''-சிறுவன் கேட்டதும் பிரதீப் உற்சாகமடைந்தான்.

''ஆமாம்ப்பா! நாங்க 'மேட் ஃபார் ஈச் அதர்' ஜோடிதான்!'' கண் அடித்தான்பிரதீப்.

''போதும்... அந்தப் பையன் நம்மைக் கணவன் — மனைவி என்று நினைத்துக் கொள்ளப் போகிறான்!'' இகஇகத்தாள் ஜனனி.

''அப்படி ஆகப் போகிறவர்கள்தானே நினைத்துக் கொள்வதில் என்ன தவறு?' என்றான் பிரதீப்.

ஜனனிக்கு வெட்கத்தில் முகம் சிவந்தது.

''உன்பெயர்என்னப்பா?'' என்றாள்சிறுவனிடம்.

''செல்வராஜுங்க!'' சொல்லியபடி சிறுவன் வரைய ஆரம்பித்தான்.

செல்வ்ராஜ் அந்த அரைமணி நேரமும் சிரத்தையாய் வரைந்தான். முடித்ததும் க்ளிப்பை விலக்கி அட்டையிலிருந்து வெள்ளைத் தாளை எடுத்து நீட்டினான்.

''வாவ்!'' என்றான் பிரதீப்.

''போட்டோ பிடித்த மாதிரி இருக்கிறது. செல்வராஜ்! யு ஆர் க்ரேட்!'' என்றாள் ஜனனி. பரவசத்துடன் தன் கைப்பையைத் திறந்து பத்து ரூபாயை நீட்டி, ''எடுத்துக்கோ'' என்றாள்.

செல்வராஜ் தயங்கியபடி வாங்கிக் கொண்டான். பிறகு அட்டையின் கார்பனுக்குக்கீழிருந்த 'காப்பி' ஸ்கெட்சை எடுத்து, ''மேடம்! சாதாரணமாய் நான் ஒரே காப்பி தான் வரைவேன். ஆனா, உங்களை மாதிரி அழகான ஜோடியைப் பார்த்ததும் இன்னொரு காப்பியை நான் வச்சிக்க ஆசைப்படறேன். அழகான ஜோடிங்க! இந்தப் படம் எனக்கு ஒன்று இருக்கட்டும்...'' என்றான்.

ஜனனியும், பிரதீப்பும் திரும்பவும் காரில் ஏறிப் புறப்பட்டனர்.

அந்தப் பெரிய ஹோட்டல் வாசலில் கார் நின்றதும் ஜனனி, ''எனக்குப் பசியே இல்லை...'' என்றாள்.

''எனக்குப் பசி. ரொம்பப் பசி!'' கண் சிமிட்டினான், பிரதீப்.

''பிரதீப்?''

''ஜனனி! ஒன்றும் தெரியாதது போல் நடிக்கக் கூடாது. அதுதான் அந்தப் படம் வரைகிற பையனே நம்மை நல்ல ஜோடி என்று சொல்லிவிட்டானே!''

''இருக்கட்டும். அதற்காக நாம் என்ன செய்ய வேண்டும்? பெரியவர்கள் ஆசிகளோடு வாழ்க்கை ஜோடிகளாக வேண்டாமா?''

''அது அப்புறம் நடக்கப் போகிற கதை. அதற்கு முன்பாய் ஓர் ஒத்திகை. ஜனனி ப்ளீஸ்!''

திடீரென பிரதீப் தன்னை இறுக்கி அணைக்கவும் ஜனனி திடுக்கிட்டுப் போனாள். விருட்டென பிரதீப்பின் கைகளை விலக்கி விட்டாள்.

''ஜனனி! ஐ லவ் யூ! நீயும் என்னை விரும்புவதாய் இருந்தால் என்னோடு இப்போ ஹோட்டல் அறைக்கு வந்தாக வேண்டும்...''

''யூ... யூ... இடியட்! ஏதோ என்னோடு மனம் விட்டுப் பேச வெளியூர் அழைக்கிறாய் என்று நினைத்தால் உன் மனசில் இப்படி ஒரு வக்கிர ஆசையா? மிஸ்டர் பிரதீப்! அடுத்து ஓர் அடி அத்து மீறினால் போலீஸைக் கூப்பிடுவேன். குட் பை டு யூ!''

காரக் கதவைத் திறந்து, வெளியேறி, படீரென மூடிவிட்டுத் தனியே சாலைக்கு வந்தாள். ஆத்திரத்திலும், அவமானத்திலும் அவள் உடம்பே பதறியது. கைப்பையைத் திறந்து சற்றுமுன் செல்வராஜ் வரைந்த படத்தை எடுத்தாள். 'நல்ல ஜோடியாம் நல்ல ஜோடி!' படத்தைத் தூள் தூளாய்க் கிழித்துப் போட்டாள். பஸ் பிடித்துத் திருச்சி வந்தாள்.

அடுத்த ஒரு மாதத்தில் சென்னைக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு வந்துவிட்டாள். அரண்டு போன பிரதீப் பிறகு அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாலும் அவனைப் பார்க்கவும் பிடிக்காத ஜனனி, சென்னை வந்ததும் எல்லாவற்றையும் மறந்து வாழத் தொடங்கினாள்.

**ம**றந்ததெல்லாம் சங்கிலித் தொடராய் இப்போது நினைவுக்கு வர...

''ஜனனி! எத்தனை நேரமாய் இங்கேயே நிற்பாய்?''

சுதாகரின் குரல் கேட்டதும் சுதாரித்துக் கொண்டு, நடக்கத் தொடங்கினாள். மனம் மட்டும் திரும்பத் திரும்பப் பழைய ஞாபகத்தில் உழல...

''உடம்பு சரியில்லையா, டியர்? சரி வா... அப்படியே பிராகாரம் பக்கம் போய்க் கல் மேடையில் உட்கார்ந்து ஓய்வு எடுப்போம்...''

சுதாகர், ஜனனியைக் கைத்தாங்கலாய் அழைத்துப் போக, ஜனனி நடைப் பிணமானாள். பிராகாரம் முழுவதும் அவள் கண்கள் அலைபாய்ந்தன. செல்வராஜ் இன்னும் இங்கேயே இருக்கிறானா? இப்போது வந்து என்னை இவரோடு பார்த்ததும் அவன் எதுவும் உளறாமல் இருக்க வேண்டுமே! செல்வராஜிடம் அந்தப் படம் வேறு இருக்கிறது. அதை மட்டும் 'இவர்' பார்த்தால் என்னைப் பற்றி என்னவெல்லாம் நினைப்பார்? தெய்வமே, நடந்ததெல்லாம் உனக்குத் தெரியும். என்னைக் காப்பாற்றுவது உன் பொறுப்பு.

ஜனனி கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

''ஸார்... ஸார்... நான் ஒரு ஏழைப்



அவன்: பரீட்சைல நான் ஃபெயில் ஆன விஷயத்தைக் கேட்டு யாருமே 'ஷாக்' ஆகலே, தெரியுமா?

இவன்: ஏண்டா?

அவன்: அப்பதான் எங்க வீட்ல 'கரெண்ட்-கட்' ஆச்சே!

— நடேஷ்ஷா.

பையன் ஸார்... நன்றாய்ப் படம் வரைவேன்.. அரைமணி நேரத்திற்குள் படம் வரைந்து விடுகிறேன். நீங்கள் கொடுப்பதைக் கொடுங்கள் ஸார், தயவு செய்து உதவி செய்யுங்கள் ஸார்...''

ஜனனி, கல் சுவர் ஓரமாய்ச் சாய்ந்து படுத்திருந்தவள், திடுக்கிட்டுக் கண் விழித்தாள். வெளிறிய முகத்தோடு எதிர் நின்ற சிறுவனை ஏறிட்டாள்.

செல்வராஜ்!

குரல் மட்டும் சற்றுப் பிசிறு தட்டி உள்ளது. மற்றபடி இரண்டு வருஷம் முன்பு அதே இடத்தில் பார்த்த அதே சிறுவன். அதே உயரம். குறுகுறுப்பான முகம். ஏழ்மையை எடுத்துச் சொல்லும் கிழிந்த அரை டிராயர். கையில் வெள்ளைத் தாள், பென்சில்கள்.

ஜனனி விருட்டென எழுந்து நின்று நகர எத்தனிப்பதற்குள் சுதாகர் செல்வராஜ் அருகில் போய் விட்டான். அவர்களிருவரும் என்ன பேசிக் கொண்டார்களோ, ஜனனிக்குத் திகிலில் தன் இதயம் அடித்துக் கொண்ட ஓசைதான் பெரிதாகக் கேட்டது.

திரும்பி ஜனனி அருகில் வந்த சுதாகர், ''பாவம்! ஏழையாம்! அவன் குடும்பக் கதையைக் கேட்கவே பரிதாபமாய் இருக்கு. நாம் அவனுக்கு உதவ வேண்டும்... நீயும் ஓய்வு எடுத்துக் கொண்ட மாதிரி இருக்கும். அரை மணி நேரத்திற்குள் நம் இருவரையும் வரைந்து விடுகிறானாம். சும்மா பணம் கொடுக்கிறேன் என்றாலும் வேண்டாம் என்கிறான்...'' என்று இரக்கப்பட்டான்.

ஜனனிக்கு மூச்சே நின்று விடும் போலானது.

'செல்வராஜ்! நீ நிஜமாகவே என்னை மறந்து போனாயா அல்லது காட்டிக் கொடுக்கக் காத்திருக்கிறாயா? எப்படியோ உன்னைத் தனிமையில் பார்த்து உன்னிடமிருந்து அந்தப் பழைய படத்தை வாங்கிக் கிழித்து எறிந்து விட்டுத்தான் தஞ்சாவூரை விட்டுப் புறப்பட்டாக வேண்டும்...'

அரை மணி நேரமும் வினாடிக்கு வினாடி செல்வராஜ் முகத்தை உயர்த்தித் தன்னைப் பார்க்கும் போதெல்லாம் வியர்த்துக் கொட்டியது, ஜனனிக்கு.

செல்வராஜ் இருவரையும் சேர்த்துப் படம் வரைந்து முடித்ததும் சுதாகர் எழுந்தான். ''ஜனனி! நீ ரொம்பவும் சோர்ந்து விட்டாய்! இரு. நான் காருக்குள்ளிருந்து உனக்கு மாத்திரை, ஃப்ளாஸ்க்கிலிருந்து சூடாய்ப் பால் கொண்டு வருகிறேன்!'' என்று நகர்ந்தான்.

இதற்காகவே காத்திருந்தது போலிருந்த ஜனனி விருட்டென எழுந்து முகத்தைக் கர்சீப்பால் துடைத்துக் கொண்டு கைப்பையைத் திறந்தாள். 'செல்வராஜ் வாயை அடைக்க நூறு ரூபாயாய்த் தந்து விடலாம்... அவன் தினமும் பத்துப் பேரையாவது வரைவான். இரண்டு வருஷங்கள் முன்பு நானும், பிரதீப்பும் வந்ததை அவன் மறந்திருக்கலாம். என்னால் மறக்க முடியாது. அது ஒரு ஜனவரி முப்பது. காந்தி இறந்த தினம். எனக்கு நல்ல புத்தி பிறந்த தினம்.

''இந்தா...'' என்று நூறு ரூபாய்த் தாளை நீட்டிவிட்டு செல்வராஜை நோக்கி ஏதோ பேச ஆரம்பித்தாள் ஜனனி. அதற்குள் அவன் சரேலெனத் தன் கரங்களைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, ''நூறு ரூபாயா? ரொம்ப அதிகங்க. ஐயா ஐம்பது ரூபாய் தரேன்னு சொன்னதே அதிகம். எல்லாரும் அஞ்சு, பத்துதான் தருவாங்க. இரண்டு வருஷம் முன்னாடி வரைக்கும் தினம் ஒரு பத்து, இருபது சம்பாதிச்சு என்னைப் படிக்க வச்ச எங்கண்ணன் விபத்துல செத்துப் போனதுக்கப்புறம் நான் அண்ணன் வழிலே தான் இந்தத் தொழிலை நடத்தறேங்க... எங்கண்ணன் அடிக்கடி சொல்வான். 'அதிகமாய் ஆசைப்படக்கூடாது'ன்னு அவன் ஆசைப்பட்டதெல்லாம் நான் நிறையப் படிச்சி முன்னுக்கு வரணும்னு தான். காந்தி மாதிரி சத்தியம்தான் பேசுவான். அதுனாலதான் இரண்டு வருஷம் முன்னாடி மகாத்மாவின் நினைவுநாள் அன்றைக்கு அவனும் செத்துட்டான் போலிருக்கு...'' என்று கண்ணீர் விட ஆரம்பித்தான்.

ஜனனி திகைப்பும், குழப்பமுமாக, ''தம்பீ... உன் பெயர் என்ன...? உங்கண்ணன்...?'' என்று இழுத்தாள்.

''என் பெயர் தங்கராஜுங்க. அண்ணன் செல்வராஜும் நானும் இரட்டைப் பிள்ளைங்க... இரண்டு மணி நேர வித்தியாசம். என்னைவிட எங்கண்ணன் நல்லாப் படம் வரைவான். ஆனால் பாருங்க, அன்னிக்குச் சாவற தினம் இந்தக் கோயிலிலிருந்து நாலு மணிக்கு வெளியே வந்தவன் சைக்கிள்ல மெயின் ரோடுல வர்றப்ப லாரி மோதி கையோடு வைச்சிருந்த வெள்ளைத் தாள் எல்லாம் ரத்தம் அப்பி...''

ஜனனிக்கும் அழுகையாய் வந்தது. அது கலைஞனை சிறுவன் செல்வராஜின் மறைவிற்கா அல்லது தன்னைக் காப்பாற்றி விட்ட கடவுளுக்கு நன்றி செலுத்தும் பொருட்டா?

உலகெங்குமுள்ள தென்னிந்தியர்கள் தில்லி அல்லது பம்பாய் சென்று பின்புதான் சென்னை, திருச்சூர், பெங்களூர் வர முடியும். ஏனெனில், எல்லா அயல்நாட்டு விமான கம்பெனிகளுக்கும் இறங்குகின்ற உரிமம் (Landing Rights) பம்பாய்க்கோ அல்லது தில்லிக்கோ மட்டுமே தரப்படுகின்றது. ஓர் அயல்நாட்டு விமானக் கம்பெனியைப் பொறுத்தவரையில், இந்தியா ஒரே நாடாகக் கருதப்படுவதால், இறங்கும் இடம் பம்பாய், சென்னை, தில்லி, கல்கத்தா என்று எதுவாக இருப்பினும், கட்டணம் ஒன்றுதான். எனவே, எல்லா வடஇந்தியரும் துபாய் — பம்பாய் அல்லது துபாய் — தில்லிக்கு ரூ. 5100 கட்டணத்தில் போய் வருகின்றனர். ஆனால் தென்னிந்தியன் முதலில் பம்பாய் வந்து, பின்பு போகவர ரூ. 1800 செலவு செய்துதான் சென்னை வரவேண்டும். இதற்கு என்ன காரணம்?

ஏர் இந்தியா தவிர, மற்ற அயல்நாட்டு விமான சர்வீசுகள், தங்கள் நேரடி விமான சர்வீசுகளை (Direct Rights) சென்னையில் இறக்க, இந்திய அரசு அனுமதி தரவில்லை. இப்போது சென்னையில் இறங்குகின்ற அயல்நாட்டு விமானங்கள் எல்லாம் உபரி சர்வீசுகள் தான்! (Feeder Service) அதாவது, சிங்கப்பூரிலிருந்தும், கொழும்பிலிருந்தும் பயணிகளை ஏற்றி வருகின்றன சென்னைக்கு. சர்வதேச விமான சர்வீசுகள் அல்ல.

எனவே, இந்தியா ஒரே நாடாக இருந்தும், பம்பாய் சுற்றியுள்ளவர்களுக்கும், தில்லியைச் சுற்றியுள்ளவர்களுக்கும் ஒரு கட்டணமும், தென்னிந்தியர்களுக்கு அதிகப்படியான கட்டணமும் வசூலிக்கப்படுகின்ற அவல நிலை.

சென்னை விமான நிலையத்துக்குச் சர்வதேச விமான நிலைய அந்தஸ்து அளித்தால் என்ன குறைந்து போய் விடும்? இந்த நாட்டில் ஏர் — இந்தியா மட்டுமே சர்வதேச விமான சர்வீஸாக இயங்குவதில் உள்ள ஏகபோக்கிய அனுகூலம் இல்லாமல் போய் விடுமே என்ற அச்சமா?

— தா. சா. ஆபிரகாம், தலைவர்,
தமிழ்நாடு பண்பாட்டுக் கழகம்.
சார்சா.

## சென்னைக்கு ஏன் இந்த ஓரவஞ்சனை?

## வாசகர் குமுறல்

## சத்துணவுக் கூடத்தில் அதிர்ச்சி!

சமீபத்தில் பெரியகுளம் சென்றிருந்தேன். செல்லும் வழியில் ஒரு சத்துணவுக் கூடத்தைப் பார்த்தேன். அதிர்ச்சி அடைந்தேன். வெளியில் மாடுகளும், எருமைகளும் கட்டப்பட்டுக் கிடந்த துடன் உள்ளே சுமார் முப்பது அல்லது நாற்பது பேர்கள் வெகு மும்முரமாக ஆடு — புலி ஆட்டம், சீட்டு, வை ராஜா வை, போன்றவைகளைக் காசு வைத்து விளையாடிக் கொண்டிருந்தனர். சத்துணவுக் கூடங்கள் இப்படித் தவறான காரியங்களுக்குப் பயன்படுவது ஒருபுறமிருக்க, இதைக் காண நேரும் குழந்தைகளின் மனம் என்ன விதமாகப் பக்குவப்படும் என்பதை எண்ணவே திகிலாக இருக்கிறது!

— பாலகுமரேசன், வேடசந்தூர்.

## நாகரிகமாய் நடந்து கொள்ளலாமே!

சென்னையில் பல்லவன் பேருந்துகளில் இரு நுழைவாயில்களிலும் ஆண்களும் பெண்களும் இடித்துத் தள்ளிக் கொண்டு ஏறுவதும் இறங்குவதும் பார்க்கவே கஷ்டமாக இருக்கிறது. நான் நாகர்கோவிலில் இருந்தபோது, நேசமணி பேருந்துகளில் முன் வாயிலில் பெண்கள் மட்டுமே ஏறி இறங்கலாம். பின் வாயிலில் ஆண்கள் மட்டுமே ஏறி இறங்கலாம். முன் நான்கு வரிசைகளில் பெண்களும், பின்பகுதி முழுவதும் ஆண்களும், நிற்கவும் அமரவும் செய்கின்றனர். இந்த ஒழுங்கு முறை மக்களே ஏற்படுத்திக் கொண்டது. இம்முறையை எல்லாப் போக்குவரத்துக் கழகப் பேருந்துகளிலும் பின்பற்றினால் என்ன?

— ஸ்ரீமதி வெங்கட், குலசேகரம்.

# மோகம் என்பது இதுதானே?

5

பூக்கூடையுடன் புவனா சந்திரசேகரின் வீட்டை அடைந்தபோது சேகர் புதிய ஆங்கில நாவல் ஒன்றில் மூழ்கியிருந்தான். 'பெஸ்ட்–ஸெல்லர்கள்' எது என்றாலும் அதை முதலில் வாங்கித் தன் மகனுக்கு அனுப்பி வைப்பார் கிருஷ்ணன். பொது அறிவு விஷயங்கள், சாதாரணக் கதைகள் என்று அவர் பாகுபடுத்தியதில்லை. அதே போல் அவர் எழுதும் கடிதங்களிலும் கார்சியா மார்கியின் புதிய சிறுகதை முதல் கம்ப்யூட்டருக்கான ப்ரோக்ராமிங்வரை எல்லா விஷயங்களும் இருக்கும். அதனால் தான் ஏறக்குறைய கிராமம் என்றே சொல்லக் கூடிய இந்தச் சின்ன ஊரில் வசித்தாலும் சேகரின் அறிவு விசாலமாகியிருந்தது.

புவனா வாசல் கேட்டைத் திறப்பதைத் தன் அறை ஜன்னல் வழியே பார்த்தபோதே அவன் மனம் உல்லாசத்தில் துள்ளியது. அவன் நண்பர்கள் கூறுவதுபோல் அவள் ஒட்டடைக் குச்சி மாதிரி சதைப் பிடிப்பில்லாமல்தான் இருக்கிறாள். சாதாரண உயரம். மாநிறத்துக்கும் சற்றே மேலான வாதுமை நிறம். ஆனால் முகத்தில் பாதி அடைத்த அந்த நீண்ட கண்களும், சிரித்தாலே வெளிச்சம் போடுவது போன்ற பல்வரிசையும் சிறு புன்னகையுடன் குழியும் கன்னமும் மிக அழகாக இருந்தன. எண்ணெய் தடவி, இறுகப் பின்னியிருந்த அவள் கூந்தல் ஏறக்குறைய முழங்காலை எட்டியிருந்தது.

சேகர் சிந்தித்தான். எனக்கு ஏன் புவனாவைப் பிடித்திருக்கிறது? இந்த நீண்ட பின்னலா காரணம், பெரிய கண்களா, கன்னக் குழியா, பல் வரிசையா? இல்லை. இதில் எதுவுமேயில்லை. அவன் இந்தத் தோற்றத்தின் பின்னாலிருந்த புவனா என்ற தோழியை விரும்பினான். அவள் குழந்தைத் தனம், வெகுளிப் பேச்சு, குரலினிமை, அறிவு எல்லாம் ஒட்டுமொத்தமாக அவனைக் கவர்ந்திருந்தது. இந்த உணர்வுக்குப் பெயர் தான் என்ன?

பெண் என்ற எண்ணம் அவன் உடம்பில் ஏற்படுத்தத் தொடங்கியிருந்த கிளுகிளுப்பு அவனுக்குப் புரிந்ததுதான். ஆனால் சினிமாப் பத்திரிகையைப் பாட்டியிடமிருந்து மறைத்து, ரகசியமாகப் புரட்டும்போது உண்டாகும் கிளு கிளுப்பும் குற்ற உணர்வும், புவனாவைப் பார்க்கும்போது ஏற்படுவதில்லை.

தனிமையான பல நேரங்களில் அவன் மனக் குதிரையில் சவாரி செய்திருக்கிறான். சூரியன் அஸ்தமனமாகும் நேரம். அடங்கி ஆர்ப்பரிக்காமல் நுரை மட்டும் காட்டும் கடற்கரை. அதோடு செம்பஞ்சு நிறக் குழம்பில் கலக்கும் அந்தி வானம். பின்னணியில் சிட்டிபாபுவின் மெல்லிய வீணைநாதம். அவனும் புவனாவும் அருகருகே, முழங்காலில் கைகட்டி, முகம் புதைத்து உட்கார்ந்திருக்கிறார்கள். கவிழ்ந்த புவனாவின் தலையில் பாட்டி தொடுத்துத் தந்த மல்லிகை, பந்தாக இருக்கும். புவனாவின் முகம்கூட முழுவதுமாக வெளித் தெரியாது. அவர்களுக்கு இடையில் பேச்சில்லை, சிரிப்பில்லை, சங்கீதமில்லை, ஆனால் ஐக்கியமிருக்கும்.

சென்ற ஆண்டு அவன் தந்தை ஊருக்கு வந்திருந்தபோது, மீசை அரும்பத் துவங்கியிருந்த மகனை ஆற்றுப் படுகையில் அமர்த்தி செக்ஸ் பற்றி நிறையப் பேசினார். தன் உடம்பில் தோன்றிவரும் மாறுதல்களுக்கு அவன் தன்னைத் தயார் செய்து கொள்ள வேண்டும் என்றார். அன்பு, உடல் உணர்வு இரண்டும் கலக்கும்போது மட்டுமே வாழ்க்கை இனிமையானதாகும் என்று விளக்கியிருந்தார். உடல் உணர்வுகளை எப்படி மனத்தின் ஆதிக்கத்தில் வைப்பது அவன் வாழ்வில் முன்னேற வழி வகுக்கும் என்றும் சொல்லியிருந்தார்.

ஆரம்பத்தில் இந்த விஷயத்தைத் தந்தையுடன் பேச சந்திரசேகர் மிகவும் சிரமப் பட்டான். ஆனால் கிருஷ்ணன் அவன் தயக்கத்தை மெதுவாகக் களைந்தார். மகனுக்கு முதல் நண்பன் தந்தையே எனப் புரிய வைத்தார். அதன் பலன், சேகரால் அவன் வகுப்பில் படித்த மற்ற மாணவர்கள் போல் செக்ஸைக் கடைப் பொருளாகவோ, சாதனையாகவோ பேச முடியவில்லை. எல்லாப் பெண்களையும் தங்கள் செக்ஸ் சாமர்த்தியத்தால் வீழ்த்தி விடுவோம் என்று நண்பர்கள் மார் தட்டிக் கொள்ளும்போதுகூட அவனுக்குச் சிரிப்புதான் வரும்.

மனம் முற்றாத பருவத்தில் ஆண்களுக்குப் பெண்களிடம் முதலில் தோன்றும் ஈர்ப்பு செக்ஸ் ஆர்வமாகவே இருக்கும் என அப்பா கூறியிருந்தார். அப்படியானால் அவன் புவனாவிடம் கொண்டுள்ளது கவர்ச்சியோ, காதலோ இல்லை. பின் அந்தப் பிணைப்பின் பெயர்தான் என்ன?

"ஏய் மக்கு, வாசல் கதவைத் திறக்காம ஜன்னல் வழியாப் பார்த்துட்டு நிக்கறியே..." புவனா கூப்பிடவும் சுய நினைவு வந்தவனாக வாயிற் கதவைத் திறந்தான். "உஷ். சத்தம் பண்ணாதே. பாட்டி தூங்கறா...."

''சேகர், நான் பூப்பறிச்சுக்கட்டா? பாட்டி கிட்டே பர்மிஷன் வாங்கணுமே! உங்க பாட்டி மகா கண்டிப்புக்காரியாச்சே!''

''எங்க பாட்டி கண்டிப்பெல்லாம் மத்தவா கிட்டேதான். உனக்குக் கிடையாது. நான் பர்மிஷன் தர்றேன். பூப்பறிச்சுக்கோ.''

''வாயால் சொன்னால் போறுமா. உங்க வீட்டிலேதான் ஏழு அடி உயரத்துக்குப் பந்தல் போட்டு வச்சிருக்கிங்களே... திருவிழாவுக்கு மரக்கால் கட்டிட்டு வர்றவன்தான் நின்ன படி பறிக்க முடியும். ஏணி எடுத்துத் தா நான் பறிச்சுக்கறேன்.''

''நீ ஏணியிலே ஏறுவியா?''

''ஏன் ஏறமாட்டேனா என்ன? எனக்குத் தென்னை மரத்திலேகூட ஏறத் தெரியும்.''

''சரி, அப்போ மல்லிப் பூ பறிக்க வேண்டாம். இந்தத் தென்னை மரத்திலே ஏறி ரெண்டு இளநீர் போடு பார்க்கலாம். நூறு ரூபா தர்றேன்.''

''என்ன ஏறமாட்டேன்னு நினைச்சியா? இளநீர் என்ன, முத்தின காயே அறுத்துப் போடறேன் பாரு. புவனா பாவாடையைத் தூக்கி இடுப்பில் செருகினாள். தென்னை மரத்தில் கால் விரல்களைக் கோத்துக் கொண்டு 'விர்'ரென இரண்டடி ஏறிவிட்டாள்.

''ஏய் புவனா, இறங்குடி. எங்கேயாவது கீழே விழுந்து செத்து வெச்சேன்னா, என் மண்டை உருளும். எறங்கும...'' என்று சேகர் பதற்றத்துடன் கத்தினான்.

பேச்சுக் குரல் கேட்டு வெளியே வந்த நாகம்மாப் பாட்டி மரத்தில் ஏறிக் கொண்டிருந்த புவனாவைப் பார்த்ததும் திகைத்து விட்டாள். ''இவ ஏண்டா தென்னை மரத்திலே ஏறறா'' என்று பதறினாள்.

புவனா மரத்தைப் பிடித்தவாறே கீழே பார்த்தபடி சிரித்தாள். ''பாட்டி உங்க பேரப் பிள்ளைதான் தென்னை மரத்திலே ஏறினால்





# மாதம் ஒரு மாவட்டம்

நமது பிரதிநிதிகள் மதுரை, பெரியார், தஞ்சாவூர் மாவட்டங்களை ரீவிசிட் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சேகரித்து வழங்கும் செய்திகள், டிசம்பர் 7ல மற்றும் 14ல இதழ்களில் இடம்பெறும்.

நூறு ரூபாய் தர்றதா 'பெட்' வச்சான்.''

''நன்னாத்தாண்டா இருக்கு விளையாட்டு. வாழைக் குருத்தாட்டம் கையும் காலும் உடைஞ்சு வச்சா சுந்தரத்துக்கு யாரு பதில் சொல்றது? அவன் சொன்னான்னு நீயும் ஏறினயாக்கும்... எறங்குடி'' என்று கத்தினான்.

புவனா மரத்திலிருந்து 'தொப்' எனக் கீழே குதித்து, மண்ணைத் தட்டிக் கொண்டாள். தான் பூப்பறிக்க ஏணி கேட்டதையும் சேகர் அவளுக்கு ஏணியில் ஏறத் தெரியாது என்று சாடியதையும் பாட்டியிடம் கோள் சொன்னாள்

''முனியன் எங்கே போனான். வழக்கம் போலப் பறிச்சுக் குடுக்கச் சொல்றது தானே?''

''முனியன் திருவாரூருக்குப் போனானே பாட்டி....'' என்று சேகர் ஞாபகப்படுத்த, ''ஏண்டா, நீதான் ஸ்டூலைப் போட்டுண்டு ஏறிக் கொழந்தைக்கு பூப்பறிச்சுத் தந்தால் என்ன?'' என்று பேரனைக் கேட்டாள்.

புவனா கேலியாக அழகு காட்டுவதைப் பொருட்படுத்தாமல் பாட்டியின் ஆணையை மேற்கொண்டு, சேகர் ஸ்டூலை எடுத்துக் கொண்டு வந்தான்.

''சேகர் ஏதாவது பாட்டுப் போடுடா. கேட்டுண்டே பூப்பறிக்கலாம்'' என்றாள் புவனா.

சேகர் உள்ளே சென்று சின்ன டேப் ரிகார்டரையும் காஸட்டையும் எடுத்து வந்தான். ''நீ இப்போ கேட்கப் போறது நம்ம ஊர் பாட்டில்லை. ஆனா நம்ம பாட்டு மாதிரியும் இருக்கும். இதுல மகாவிஷ்ணு ட்ரூப் பாடறாங்க.....''

''மகாவிஷ்ணு பாடறாரா? ப்ரம்மா, விஷ்ணு, சிவனெல்லாம் பாடி டேப் கூடக் கொடுத்திருக்காங்களா என்ன?''

''ஆமாம், தேவலோகத்திலே இந்திரன் டேப் செய்து நாரதர் மூலமா பூமிக்கு அனுப்பிச்சாராம். பேச்சைப் பாரு. இது ஒரு அமெரிக்கன் ட்ரூப். இதிலே நம்ம ஊர் வித்வான்கள்கூடச் சேர்ந்திருக்கா. கேளு. உன்னால் யாரையாவது அடையாளம் சொல்ல முடியறதா பார்க்கலாம்.''

சேகர் காஸட்டைப் போட்டுவிட்டு, கைத்தறி ஒத்தை வேஷ்டியை முழங்கால்வரை மடித்துக் கட்டிக்கொண்டு ஸ்டூலில் ஏறினான். வெள்ளை வெள்ளையாய் அரும்பியிருந்த மல்லிகை மொக்குகளைப் பார்த்தபோது புவனா சிரிப்பது போலிருந்தது. இந்த மொக்குகளை ஏன் பறிக்க வேண்டும். அப்படியே செடியில் விட்டால் அதிகாலையில் செடியே தெரியாமல் 'குப்'பென மலர்ந்திருக்கும். வாசல் நடை வரை மல்லிகை மணம் வீசும். காற்றில் வீட்டிற்குள்ளும் மிதந்து வரும். அனாவசியமாக மொட்டில் கிள்ளி, அரும்பை நாரால் இம்சை செய்து தொடுத்து தலையில் வைத்துக் கொள்வது அவசியம் தானா?

இதை அவன் புவனாவிடம் சொன்ன போது அவள் அரும்பாகச் சிரித்தாள். ''மல்லியைச் செடியிலே பூக்கவிட்டா அழகாத்தான் இருக்கும். ஆனா, மலர்ந்த கொஞ்ச நேரத்திலே வதங்கி விழும். பூவாத் தொடுத்து ஸ்வாமி மேல் போட்டால் மறுநாள்கூட வாடாது. பின்னலிலே வச்சுண்டா ஒரு வாரம் வாசனை தலையிலிருக்கும். ஏய் சேகர், உனக்குப் பூப்பறிக்கறதுக்குச் சோம்பலாக இருந்தா வெளிப்படையாச் சொல்லிடு. பூ செடியிலே இருந்தா அழகாயிருக்கும் என்றெல்லாம் கதை விடாதே.''

''பறிக்கச் சோம்பலாக இருக்கிறதால தான் படிச்சுண்டு இருந்த நாவலைக் கூடப் பாதியிலே வெச்சுட்டு இப்படி ஸ்டூல் மேலே ஏறிக் கஷ்டப்படறேனாக்கும்...'' சேகர் கைநிறையச் சேர்த்திருந்த அரும்புகளைப் புவனாவின் பூக்கூடையில் கொட்டினான்.

''அம்மாடி... உங்க வீட்டு மல்லிச் செடி ஒண்ணுதான் இப்படிப் பூக்கிறது. இன்னிக்குப் பூத்திருக்கிற எல்லாப் பூவையும் பறித்துக் கொடுத்தா கட்டாயம் முப்பது முழமாவது தேறும்...''

''சேகர், இதென்ன இது. வெள்ளைக்காரன் பாட்டுலே நம்ம ஊர்லே ஸ்வரம் பாடறாப் போல பாடறான்... அட... அட... ஸரிமக ரிஸ... ஸ... இதென்ன வாத்தியம்? இது?''

''ஜான் மெக்லாகன்ங்கற அமெரிக்காக்காரன் கிடார் வாசிக்கறான்... அவன் நம்ம சங்கீதத்தில ரொம்பக் கவரப்பட்டு நம்ம நோட்டுகளைக் கலந்து வெஸ்டர்ன் ம்யூசிக் செய்தான்... 'இந்த ஆர்க்கெஸ்ட்ரா பத்து வருஷங்களுக்கு முன் வாசித்தது. தி இன்னர் ஃப்ளேம்னு இப்போ வெளிவந்திருக்கு... உள்ளுக்குள் எழும்பற தீ என்றால் பாரதியார் எழுதின அக்னிக் குஞ்சென்ற வார்த்தை ஞாபகம் வரல்லை... அருமையான தலைப்பு. சுகமான சங்கீதம்...''

புவனா இப்போது பூவை மறந்து சங்கீதத்தில் லயித்திருந்தாள். பூக்கூடை கையில் சரிந்திருந்ததைக்கூட அவள் கவனிக்கவில்லை.

''இதே ஆள்தான் நம்ம ஊர் வயலின்

சங்கர், கடம் விநாயகராம், தபலா ஜாகிர் ஹுசேன் இவர்களோட சேர்ந்து சக்தின்னு ஒரு ட்ரூப் ஆரம்பித்து அற்புதமாப் பாட்டு தயாரிச்சிருக்கான். நீ வீட்டுக்குப் போற போது சக்தி காஸட் தரேன். சுந்தரம் மாமாவைப் போட்டுக் காட்டச் சொல்லு..."

"சேகர், நம்ம கர்நாடக சங்கீதத்தில் ரொம்ப அருமையான விஷயமே நாம ஸ்வரம் போடும் விதம்தான். அதனாலதான் எல்லாரும் அதை ரசிக்கிறா..."

"நம்ம சங்கீதத்துக்கு நிறைய பலம் இருக்கு... ஆனால் அனேகம் பாடகாளுக்குச் சாரீரம்தான் கஷ்டப்படுத்தறது. உன்னைப் போல அருமையான சாரீரம் இருக்கிறவா, அதை முறையா கஷ்டப்பட்டு வளர்த்துக்காம, டப்பா சங்கீதத்துக்குப் போறா..."

"எது டப்பா சங்கீதம்... நான் எங்கே டப்பாப் பாட்டுப் பாடினேன்?" புவனா சண்டைக்குக் கிளம்பினாள்...

"ஆமா... கடவுள் நம்பிக்கையில்லாத கட்சிக்காரன் கூட்டத்திலே பாடற கடவுள் வணக்கமும், அவன் தலைவன் பற்றிய பாமாலையும் என்ன சாஸ்த்ரீய சங்கீதமாகும்?"

"நாம இப்போ கேட்டுக் கொண்டிருப்பது மட்டுமென்ன, பெரிய சாஸ்த்ரீயம்?"

"இது சாஸ்த்ரீயமில்லை. ஆனா இதுல சங்கீதத்தைக் கௌரவப் படுத்தறா... நீ அதை அவமானப்படுத்தறே..."

"நீ இந்த மாதிரியெல்லாம் பேசினா, நான் அத்தனை பூவையும் தரையிலே கொட்டிட்டுப் போயிடுவேன்... ஆமா, எனக்கு உங்க வீட்டுப் பூவும் வேணாம், ஒண்ணும் வேணாம்...

சேகர் ஸ்டூலிலிருந்து இறங்கினான். கையிலிருந்த பூவை அவள் கூடையில் போட்டபடியே... "புவனா, பூ போறும்... உன் கூடை ரொம்பிடுத்து... உன் படிப்பைக் கெடுத்து, உன் சங்கீத சிட்சையையும் தொடராம, இப்படி அரைகுறையா உன்னை மேடையேத்தறாளே, உங்கம்மா, அது உனக்கு நல்லதில்லைன்னு எனக்கு நிச்சயமாத் தோணறது. நீதான் உங்கம்மாவிடம் தைரியமாப் பாட மாட்டேன்னு சொல்லணும்..."

தனக்குக் கிடைத்திருக்கும் புதிய அந்தஸ்தையும், புகழையும் சேகர் ஏன் தடுக்கிறான் என்று புவனாவுக்குப் புரியவில்லை. சேகர் மிகவும் பொறாமை பிடித்தவன் என எண்ணினாள்.

(தொடரும்)

## அருள்வாக்கு

காருண்யம் — கருணை காட்டுவது — என்றால் இப்படிக் கருணை காட்டுகிறவர் ஒரு படி உயர நிற்கிற மாதிரியும், கருணைக்குப் பாத்திரமாகிறவர் ஒரு படி கீழே நிற்கிற மாதிரியும் தொக்கி நிற்கிறது. "நாம் உசந்த ஸ்தானத்தில் இருக்கிறோம். நம் உதவியைப் பெறுகிறவர் நம்மைவிடத்தாழ்ந்தியாக இருக்கிறார். நாம் 'கருணை' காட்டுகிறோம்" என்று நினைக்கிற போதே நாம் செய்கிற உபகாரம் அசுத்தமாகி விடுகிறது. உபகாரம் செய்வதன் பயனாக நமக்கு எளிமை, அடக்கம், அஹங்கார நீக்கம் ஆகியன உண்டாக வேண்டும். மாறாக நாம் உபகாரம் பண்ணும் போது, போனால் போகிறது என்று யாருக்கோ கருணை காட்டுகிற மாதிரி நினைத்தோமானால், இது ஆணவ அஹங்காரங்களுக்கு இடமாகி விடுகிறது. உபகாரத்தால் நம் ஆத்மாவை உயர்த்திக் கொள்வதற்கு நேர்மாறாக ஆத்மஹானியே உண்டாகிவிடும்.

கருணை, காருண்யம் என்கிற வார்த்தையைச் சொல்வதை விட அன்பு என்று சொல்லிவிட்டால் இந்த ஏற்றத் தாழ்வு தொனிக்காமல் இருக்கும். அன்பு என்பது நம்மவர்களிடமே நாம் ஸ்வபாவமாகச் செய்கிற காரியம்; இதிலே போனால் போகிறதென்று யாரோ அந்நியருக்கு இரக்கம் காட்டுகிற மாதிரியான அஹங்கார எண்ணம் இல்லை.

ஆனாலும் கூட நடைமுறை உலகில் இப்படி நம்மவர், அசலார் என்கிற பேதமேயில்லாமல் ஸகலரையும் ஒரேபோல் பாவித்து, தாரதம்மியம் இல்லாமல் ஸ்வபாவிகமான அன்பைச் செலுத்துவது என்றால் அது ஆரம்ப காலத்தில் ஸாத்யம் இல்லாமல்தான் இருக்கிறது. இந்தப் பொது இயற்கையை ஒப்புக் கொள்கிறது போலத்தான் திருவள்ளுவர் அன்பு, அருள் (அருள் என்பதைக் கருணை என்று வைத்துக் கொள்ளலாம்) என்று பிரித்து distinction சொல்லியிருக்கிறார். அவர் என்ன சொல்கிறார்? அருள் என்னும் அன்பின் குழவி என்கிறார். அன்பு ஈன்ற குழந்தையே அருள் என்று அர்த்தம்.

இப்போது நமக்கு வேண்டியவர்கள் என்று சிலரை மட்டும் நினைத்துக் கொண்டு, அன்பு செலுத்துகிறோம் அல்லவா? இந்த 'வேண்டியவர்'களை நம் ஊரார், தேசத்தார், உலகத்தார் என்று மேலே விஸ்தரித்துக் கொண்டே போனால், அன்பிலிருந்தே படிப்படியாக அருள் பிறக்கிறது. அப்புறம் இப்படி அருள் பண்ணுகிறவனைப் பொருத்தமட்டில் அது 'அருள்' 'கருணை' என்றெல்லாம் உயர்வு மனப்பான்மையை (Superiority Complex) காட்டுகிற விஷயமாக இல்லாமல், ஸ்வபாவமான, ஸஹஜமான அன்பாகவே ஆகிவிடுகிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று, துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத் துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும் பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல் துலக்குவதால் புத்துணர்ச்சி தரும் தூய சுவாசமும், வலிமை மிகுந்த ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




B84.55 Tam

*கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்*
*பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !*

# கண்ணுக்குத் தெரியாத கரைகள்

## ஞானம்பாள் செல்வம்

போட்டிக் கதை — 12








'**சோ**ழன் நிதியகம்' வாசலில் ரிக்ஷாவை ஓரமாய் நிறுத்திவிட்டு உள்ளே நுழைந்தான் ராமச்சந்திரன். குழல் விளக்கு ஒளி தாளாமல் அவன் இமைகள் துடிதுடித்தன. மேனேஜர் இருக்கையில் சேகர்! ராமச்சந்திரன் முகத்தை மலர்த்தினான்.

'வர்றதிங்கட்கிழமை ராத்திரி ஒன்பது மணிக்கு மேல வந்து பணத்தை வாங்கிட்டுப் போ... ராமச்சந்திரா!'' —

மூன்று நாட்களுக்கு முன் சேகர் கூறியது அவன் நினைவில் எதிரொலித்தது. அந்த நம்பிக்கையில்தான் அன்று மாலை மனைவி கோமதியை ஒரு ப்ரைவேட் நர்ஸிங் ஹோமில் சேர்த்துவிட்டு வந்திருந்தான். தலைப் பிரசவம்!

அரசு மருத்துவமனையில் ஏனோ தானோவென்று கவனித்து ஒருவேளை தன் மனைவியின் உயிருக்கு ஏதும் ஆபத்தாகிவிடக் கூடாதே என்ற பயம் அவனுக்கு.

மேனேஜர் சேகரையும், கிளார்க் மாணிக்கத்தையும் தவிர... அந்த நிதியகத்தில் வேறு யாரும் இல்லாதிருந்தது ராமச்சந்திரனுக்குச் சற்று தெம்பைக் கொடுத்தது.

''சார்!''

''தலையைக் குனிந்தபடி அன்றைய கலெக்ஷனை வேகவேகமாய் எண்ணிக்கொண்டிருந்த சேகர் சட்டென்று முகத்தை மட்டும் நிமிர்த்தினான்.

''என்ன ராமச்சந்திரா?''

''இன்னிக்குப் பணம் தர்றேன்னு சொன்னீங்க!''

''ஆமாம்! சொன்னேன்! ஆனா இன்னிக்குப் பணமே இல்லையே ராமச்சந்திரா! அடுத்த வாரம் வா.''

தூக்கிவாரிப் போட்டது ராமச்சந்திரனுக்கு.

''ஐயோ! என்ன சார்! இப்படிச் சொல்

விட்டீங்க! உங்களை நம்பித்தான் என் சம்சாரத்த ஆஸ்பத்திரியில சேர்த்துட்டு வந்திருக்கேன். தலைப்பிரசவம்! விடியறதுக்குள்ள குழந்தை பிறந்திடும்னு டாக்டரும் சொல்லிட்டாரு! பணம் இல்லேன்னு ரொம்பத் திண்டாடிப் போவேன் சார்! கொஞ்சம் தயவு பண்ணுங்க!''

ராமச்சந்திரன் ஏழையாய்க் கெஞ்ச — சேகர், அப்போது அவன் பார்த்துக் கொண்டிருந்த கணக்கின் இழுபறியில் அதிகமாகவே முகத்தைச் சுளித்தான்.

''தயவு பண்றதுக்கு இது ஒண்ணும் அனாதை ஆசிரமம் இல்லே ராமச்சந்திரா! உன் சௌகரியத்துக்கும், உன் முடைக்கும் பணத்தைத் தூக்கிக் கொடுக்க முடியாது..''

''சார்! தயவு செஞ்சி இல்லேன்னு மட்டும் சொல்லிடாதீங்க! ஏதோ... இருக்குறதானாலும் குடுங்க! உடனடி செலவை சமாளிக்கணும்.''

அவ்வளவுதான்! சேகருக்கு வந்த வேகம் கொஞ்ச நஞ்சமல்ல!

''என்ன ராமச்சந்திரா... நீ! இத என்னு பைனான்சுன்னு நினைச்சிகிட்டியா, என்ன நினைச்சிகிட்டிருக்கே! இன்னைக்கி சுத்தமா கலெக்ஷனே ஆகலே! உனக்கு எங்கேர்ந்து ஆயிரம் ரூபாய் கடன் குடுக்குறது! வீணா நீ இங்கே நின்னு கெஞ்சிக்கிட்டிருக்கிறதுல அர்த்தமே இல்லே! பேசாம இடத்தைக் காலி பண்ணிடு! ஒரு வாரம் கழிச்சி வா! போ... போ...!''

சேகர் வார்த்தைகளை முடிப்பதற்குள் அம்பாய்ச் சீறியபடி, அந்த நிதியக வாசலில் வந்து நின்றது ஒரு நீலநிற அம்பாஸிடர்!

ஐம்பது, ஐம்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு கருத்த தேகம் வெள்ளையும் சள்ளையுமாய் உள்ளே நுழைய, அனிச்சையாய் எழுந்து நின்றான் சேகர்! வாயெல்லாம் பற்களாகி வந்தவரைக் கையெடுத்து வணங்கினான்.

''வாங்க... சார்! வாங்க... வாங்க...!''

அந்தக் கருத்த தேகம் சோபாவில் அமர, சோபா கிறீச்சிட்டது!

''எங்க சார்!... இப்படி? இந்தப் பக்கமெல்லாம் நீங்க வரவே மாட்டீங்களே!''

''வரமாட்டேன்தான்! வரும்படியா ஆபிடுச்சே?'' வந்தவர் தம் கட்டைக் குரலில் வருத்தத்தைக் கலக்க... சேகருக்கு மனத்தைப் பிசைந்தது.

''என்ன சார் விஷயம்?''

''ஒண்ணுமில்லே சேகர்! என் ரெண்டு பசங்களும் நாளைக்கு காலைல ஊட்டிக்குப் போறேம்னு திமர்ன்னு இப்ப வந்து சொல்றாங்க!''

''எதுக்கு சார்!''

''காலேஜ் லீவாச்சே, சும்மாதான் ஜாலியா போயிட்டு வர்றேன்றாங்க! இந்தச் சமயம் பார்த்துக் கையில அவ்வளவு பணம் இல்லே! அடுத்த வாரம் போயிக்கலாம்னாலும் கேக்க மாட்டேங்கறாங்க...''

''இப்போ உங்களுக்கு எவ்வளவு சார் பணம் வேணும்!''

''ஓர் ஆயிரத்து ஐந்நூறு ரூபா இருந்தாப் போதும் சேகர்!''

''வாங்கிக்கங்க சார்! உங்களுக்கு இல்லாத பணமா?''

''இன்னும் ரெண்டு நாள்ல திருப்பிக் கொடுத்தனுப்புறேன்...''

''உங்க சௌகரியப்படி குடுத்தனுப்புங்க சார்! இப்போ என்ன... அதுக்கு அவசரம்? நான் சமாளிச்சிக்கறேன்.''

சேகர் மின்னலாய் ட்ராயரிலிருந்த ஒரு கத்தை நூறு ரூபாய்களை எடுத்து மாற்றி... மாற்றி எண்ண... ஓரமாய் நின்று கொண்டிருந்த ராமச்சந்திரனுக்கு தொண்டைக்குள் மிடறு நுரையடித்தது.

பணத்தை வாங்கி, பைக்குள் செருகிக் கொண்டு எழுந்து நின்றார் அந்தப் பெரியவர்.

''அப்பு... நான் வரட்டுமா சேகர்?''

''போயிட்டு வாங்க சார்!''

''ரொம்பத் தேங்க்ஸ்!''

''அதனாலென்ன சார்! பரவாயில்லே! போயிட்டு வாங்க!''

மீண்டும் வீதியில் நின்ற அம்பாஸிடர் உயிர் பெற்று உருள... சேகர் அந்த அம்பாஸிடர் மறைந்தவுடன் உள்ளே வந்து அவன் இருக்கையில் அமர்ந்தான்

ராமச்சந்திரனின் பார்வை அவனை முள்ளாய் நெருடியது.

''என்ன ராமச்சந்திரா அப்படிப் பார்க்குறே?''

''பணம் சுத்தமா இல்லேன்னீங்களே சார்...!''

''ஆமா... இப்போ எப்படி வந்திச்சின்கறியா?''

''ம்!''

''அது என் இஷ்டம்! யாருக்கு வேணும்னாலும் கொடுப்பேன்! யாருக்கு வேணும்னாலும் இல்லேம்பேன்.''

''சார்! என் சம்சாரம் பிரசவ வலியால துடிச்சிக்கிட்டிருக்கா! அதுக்கு பணம் இல்லேன்னு பொய் சொல்லிட்டு, ஜாலியா ஊர் போறவங்களுக்கு எடுத்துக் குடுத்திட்டீங்களே!''

''யோவ்! அவுரு என் பக்கத்து வீட்டுக் காரரு! எனக்கு முடை வரும் போதெல்லாம்

''முக்கியக் காரியமா ஸ்வீட், காரம், காப்பியெல்லாம் வெட்டி முடிச்சுட்டோம். இனி இந்த மீட்டிங்கை அடுத்த வாரத்துக்குத் தள்ளி வெச்சுக்கலாம்! என்ன சொல்றீங்க?''



நூறு இருநூறுன்னு தூக்கிக் குடுப்பாரே! நீ குடுப்பியா?''

''அப்ப அவுரு. அப்பப்ப உங்களுக்குத் தூக்கித் தூக்கிக் குடுக்குற பணம்தான் பெரிசாப் போச்சு! என் சம்சாரத்தோட இன்னைய நிலைமை உங்களுக்கு பெரிசாத் தோணலை! இல்ல... சார்!''

ராமச்சந்திரனின் வார்த்தைகளைக் கேட்ட சேகருக்கு எரிச்சல் எல்லையைக் கடந்தது.

''அட! சரிதான் போய்யா! பெரிய அறிவுக் களஞ்சியம்! அறிவுரை வழங்க வந்திட்டாரு. போ! போ! போயிட்டு ரெண்டு மூணு வாரம் கழிச்சி வா! பார்க்கலாம்!''

அதற்குமேல் அங்கே நின்று கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை என்பதை உணர்ந்து கொண்ட ராமச்சந்திரனும் வேறு வழியின்றி, துண்டை உதறி வாயில் பொத்திக் கொண்டு, விழிகளில் நீர் கோக்க, அந்த நிதியகத்தை விட்டு வெளியே வர, அவனை உரசிக் கொண்டு வேகமாய் உள்ளே நுழைந்தான் ஒரு தந்தி ப்யூன்.

''சார்! இங்கே சேகர்ங்கிறது...?''

''நான்தான்! ஏம்ப்பா?''

''உங்களுக்கு மெட்ராஸ்லேர்ந்து ஒரு டெலிகிராம்! சார்!''

குப்பென்று வியர்த்தது சேகருக்கு!

ப்யூன் விரல் வைத்த இடத்தில் இயந்திரமாய்க் கையெழுத்தைப் போட்டுவிட்டு, தந்தியைப் பிரித்துப் படித்த சேகர் அப்படியே துடித்துப் போனான்.

அவன் உடல் வெடவெடவென்று நடுங்கியது!

அருகே அமர்ந்து லெட்ஜரைப் புரட்டிக் கொண்டிருந்த கிளார்க் மாணிக்கம் சேகரின் தடுமாற்றத்தைக் கண்டவுடன் திடுக்கிட்டு எழுந்தான்.

''என்ன சார்?''

''என் தங்கச்சி புருஷனுக்கு ரொம்ப சீரியஸாம்! உடனே பணத்தோட கிளம்பி வரச் சொல்லி தங்கச்சி தந்தி அடிச்சிருக்கு!''

''ஏதும் சிக்கா இருந்தாரா... சார்?''

''இல்லையே! நல்லாத்தானே இருந்தாரு! இப்போ என்ன செய்யறதுன்னே புரியலையே?''

''என்ன செய்யறதா? உடனே கிளம்புங்க, சார்! நான் கவனிச்சிக்கறேன்! இருக்குற பணத்தை எடுத்துக்குங்க! சிக்கிரமா ஓர் ஆட்டோ பிடிச்சுத் திருவள்ளுவர் பஸ் ஸ்டாண்டு போயிட்டீங்கன்னா எப்படியும் லாஸ்ட் பஸ்ஸைப் பிடிச்சிரலாம்! நாளைக்கு 'பந்த்' வேற! ஒரு பஸ்ஸும் ஓடாது! சிக்கிரமாக் கிளம்புங்க! உங்க வீட்ல விஷயத்தை நான் சொல்லிக்கிறேன்.''

சேகருக்கு மாணிக்கம் சொல்வதுதான் சரி என்று பட்டது.

ட்ராயரை வேகமாய் வெளியே இழுத்து, மளமளவென்று நூறில் கொஞ்சமும், ஐம்பதில் கொஞ்சமுமாய் எடுத்து, மாணிக்கத்தை விட்டு எண்ணச் சொல்லி, குறித்துக் கொள்ளச் சொல்லிவிட்டு மின்னலாய்













வெளியே வந்தான்.

"மெட்ராஸ்! மெட்ராஸ்! மெட்ராஸ்!" ஆட்டோவிலிருந்து அரக்கப் பறக்க இறங்கி பஸ் ஸ்டாண்டிற்குள் நுழையும்போதே, சேகரின் செவிகளில் அந்தக் குரல் தேனாய்ப் பாய்ந்தது.

"சார்! சார்! மெட்ராஸ் ஒண்ணு குடுங்க! டிக்கெட் இருக்குல்ல? என் தங்கச்சி புருஷனுக்கு உடம்பு சீரியஸா இருக்கு. இன்னைக்கு நான் மெட்ராஸ் போயாகணும்!"

"ஒண்ணே ஒண்ணுதான் சார் இருக்கு! நல்லவேளை! வண்டிய எடுக்கறதுக்குள்ளே வந்தீங்க!"

முகத்தை மலர்த்திக் கொண்டே, அந்த கண்டக்டர், டிக்கெட்டைப் பஞ்சிங் மிஷினில் வெட்டி இறுதியாய்ச் சேகரிடம் நீட்ட...

கணீரென்று ஒலித்தது அந்தக் குரல்!

"செல்லப்பா! மெட்ராஸ் ஒண்ணு!"

சேகரிடம் நீட்டிய கையைச் சட்டென்று சுருக்கிக் கொண்டான் செல்லப்பன் என்ற அந்தக் கண்டக்டர்!

அருகே வந்து சூட்கேஸைக் கீழே வைத்து நிமிர்ந்த அந்தக் கம்பீரமான உருவத்திற்கு, செல்லப்பன் உடலை வளைத்து, "வணக்கம் சார்!" என்றான்.

"நல்லவேளை! நான் டிக்கெட்டை இந்த சாருகிட்ட குடுக்கப்போன நேரத்துல வந்திட்டீங்க! இந்தாங்க சார்! ஒண்ணே ஒண்ணுதான் இருக்கு!"

தூக்கி வாரிப் போட்டது சேகருக்கு!

அந்தக் 'கம்பீரம்' டிக்கெட்டை வாங்கிக் கொண்டு பஸ்ஸுக்குள் தன்னை அடக்கப் படுத்திக் கொள்ள... சேகர் பற்களை அரைத்து அந்தச் செல்லப்பனை விழிகளால் எரித்தான்.

"ஏன் சார்? முந்தி வந்த என்னை விட, உங்களுக்கு அந்த ஆள்தான் முக்கியமாப் போயிட்டாரா? எனக்குல்ல அந்த டிக்கெட்டைக் குடுத்திருக்கணும்?"

"அது என் இஷ்டம் சார்! நான் யாருக்கு வேணும்னாலும் குடுப்பேன்! யாருக்கு வேணும்னாலும் இல்லேம்பேன்! அவரு இந்த பஸ்ஸுக்கு ரெகுலர் கஸ்டமர்! அதோட, ஒவ்வொரு தடவை வரும்போதும், பத்து, இருபதுன்னு வெட்டுவாரே... நீங்க வெட்டுவீங்களா?"

அப்போ, உங்களுக்குப் பணம்தான் முக்கியம்! பயணத்தோட காரணம் முக்கியமில்லே! என் தங்கச்சி புருஷனுக்கு மெட்ராஸ்ல ரொம்ப சீரியஸா இருக்குன்னு தந்தி வந்திருக்கு சார்!"

அவ்வளவுதான்.

கண்டக்டருக்கு எரிச்சல் எல்லையை மீறியது. முகத்தை அஷ்டகோணலாய் மாற்றிக் கொண்டார்.

"இதோ பாருங்க சார்! உங்க கதையெல்லாம் தூக்கம் வராம எவனாவது ஃப்ளாட்பாரத்துல அலஞ்சிக்கிட்டிருப்பான்! அவன்கிட்ட போய்ச் சொல்லுங்க! எனக்கு நேரமாயிடிச்சி. நான் வண்டியை எடுக்கணும்!"

செல்லப்பன் வேகமாய் படிக்குத் தாவி, கதவை இழுத்து உள்ளே சாத்திக் கொள்ள, அதுவரை அங்கே நின்று உறுமிக் கொண்டிருந்த அந்த பஸ் மெள்ள நகர ஆரம்பித்தது. மேற்கொண்டு செய்வதறியாது, சேகர் திக்பிரமை பிடித்தவன் போல் அப்படியே அசைவற்று நிற்க...

"சார் ரிக்ஷா!"

பரிச்சயமான குரல்!

சட்டென்று திரும்பினான் சேகர்!

ரிக்ஷாவில், ராமச்சந்திரன்!

---

## புதுக் கவிதைப் போட்டி-5

"காத்திருக்கிறார்கள்" — இதுதான் 7.12.86 கல்கி இதழில் இடம்பெற இருக்கும் போட்டிக்கதையின் தலைப்பு-ஒரு சாதாரணப் பிரச்னையை மெலிதான நகைச்சுவையுடன் அணுகியுள்ளார் கதாசிரியர்.

'காத்திருக்கிறார்கள்' கதையைப் படிக்கும் பிளஸ் டூ மற்றும் கல்லூரி மாணவர்கள் அக்கதை உணர்த்தும் பிரச்னையின் அடிப்படையில் சுருக்கமான ஒரு புதுக்கவிதை எழுத வேண்டும்.

- எட்டே வரிகளுக்குள் ஒரு போஸ்ட்கார்டில் உங்கள் புதுக்கவிதையை அடக்குங்கள்.
- கார்டின் மறுபுறம் பள்ளி அல்லது கல்லூரி முத்திரையைப் பெறுங்கள்.
- உங்கள் பெயரையும் விலாசத்தையும் தெளிவாக எழுதுங்கள்.
- விலாசப் பகுதியில் புதுக் கவிதைப் போட்டி — 5 என்று குறிப்பிடுங்கள்.
- கவிதைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 15.12.86.

முதல் பரிசு: ரூ. 100/—
இரண்டாம் பரிசு: ரூ. 25/— தவிர ஆறு மாதங்களுக்குக் கல்கி இலவசம்.
தவிர பிரசுரமாகும் அனைத்துக் கவிதைகளுக்கும் சன்மானம் உண்டு.

## காத்திருக்கிறார்கள்



மகாசந்நிதானம் அபிநவ வித்யாதீர்த்த சுவாமிகள்.

# ‘சாதியைக் கெடுப்பானேன்? பூசலை வளர்ப்பானேன்!’’

சிருங்ககிரி ரிச்ய சிருங்க முனிவர் தவம் செய்த புண்ணிய பூமி. இயற்கையழகு கொஞ்சும் மலைநாடு: துங்கா நதிதீரம். இந்த அழகான இடத்தில் சாரதா பீடத்தை நிறுவினார் ஆதிசங்கரர். முதல் பீடாதிபதியாக ஸ்ரீ ஸுரேச்வராச்சாரியாரை அமர்த்தினார். அன்று முதல் சாரதா பீடத்தில் எழுந்தருளிய ஒவ்வொரு மகானும் நமது நாட்டில் ஆன்மீகம் தழைக்கவும், இந்து தர்மம் செழிக்கவும் அரும்பாடு பட்டு வந்திருக்கிறார்கள். தென்னாட்டின் சரித்திரத்தை மாற்றியமைத்திருக்கிறார்கள். பல அற்புதங்களை நிகழ்த்தியிருக்கிறார்கள். ஆன்மீக நூல்களை எழுதிக் குவித்திருக்கிறார்கள். மகா பண்டிதர்களாக விளங்கியிருக்கிறார்கள்.

**சிருங்கேரி சாரதா பீடாதிபதிகளான மகாஸந்நிதானம், ஸந்நிதானம் இருவரிடமும் கல்கி நேயர்களின் சார்பில் பொதுவான பிரச்னைகளைப் பற்றிக் கேட்டோம். நமது கவலைகளைப் புரிந்து கொண்டு பரிவுடன் பல கருத்துக்களை எடுத்துச் சொன்னார்கள்.**

கேள்வி: இன்று நாட்டில் பல பிரச்னைகள் உள்ளன முக்கியமாக வன்முறை தாண்டவமாடுகிறது. மதத்தின் பெயரால் பயங்கரவாதம்...

பதில்: மதங்களின் பெயரால் என்று சொல்வதே தவறு. மதங்களால் சண்டையே வராது. வேறு உள்நோக்கம் இருக்கிறது. மதத்தின் பெயரை உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள். சுயநலத்துக்காக என்ன வேண்டுமானாலும் செய்துவிட்டு மதத்தைச் சொல்லுகிறார்கள். தான் அதிகாரத்தில் இருந்தால் சரி என்று நினைக்கிறார்கள். அதற்காக என்னென்னமோ நடக்கிறது. வருகிற சண்டை எல்லாம் ஆசைகளினால்தான் வருகின்றன. தான் நினைத்ததை நடத்த என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்று ஆரம்பித்து விட்டார்கள். அதுதான் வன்முறைக்கு காரணமே தவிர மதம் இல்லை.

கேள்வி: ஆன்மீகத் துறையில் உலகத்துக்கே வழிகாட்டியாக இருக்க வேண்டிய பாரத நாட்டில் இன்று சாமானிய தர்மம் கூடப் புறக்கணிக்கப்படுகிறது. வரதக்ஷிணை,

லஞ்சம், சட்டத்தை மீறுவது, பதவி ஆசை எல்லாம் அதிகமாகி விட்டன. உணவுப் பண்டங்களில் நச்சுப் பொருள்களைக் கலந்து விற்குமளவிற்கு தர்மம் நிலை குலைந்து போயிருக்கிறதே!

பதில்: வரதக்ஷிணை வாங்குவது சாஸ்திரமே இல்லை. இதுவும் ஆசையால் வரும் தீமை. லஞ்சம் திருட்டு முதலியவற்றுக்கும் ஆசையே காரணம். ஒருவனிடம் லக்ஷ ரூபாய் இருக்கிறது என்றால் இன்னொருவனுக்கு அதில் பத்தாயிரம் நான் எடுத்துக் கொண்டால் என்ன என்று தோன்றுகிறது. அதையே நியாயமாகத் திருடன் நினைக்கிறான். இன்னொருவன் பொருளுக்கு ஆசைப் படக்கூடாது என்ற எண்ணத்தை வளர்த்துக் கொண்டால், அதையே கௌரவமாக நினைத்துக் கொண்டால் பிரச்னையே வராது.

பகவானை எல்லோரும் நம்பினால் தவறு செய்யக் கூடாது என்ற எண்ணம் இருக்கும். 'அவன் பார்த்திண்டிருக்கான்' என்ற நினைவு இருக்கும். இப்போது பகவான் ஸ்தானத்தில் யார் இருக்கிறார்? போலீஸ்காரர். நல்ல நடத்தையைப் போலீஸ்காரர் கொண்டு வர முடியுமா? எத்தனை போலீஸ் இருந்தாலும் முடியாது. குற்றம் பண்ணினவனைத்தான் போலீஸ்காரர் பிடிக்க முடியும். குற்றம் பண்ணாமல் இருக்கிற மனதை உண்டு பண்ண முடியாது. சட்டங்கள் சரீரத்தைத் தண்டிக்கின்றன. சாஸ்திரங்கள் மனதைப் பக்குவப்படுத்துகின்றன. எனவே, தெய்வ பக்தி வளர வேண்டும். பகவானிடம் எல்லோருக்கும் நம்பிக்கை இருக்க வேண்டும். சாஸ்திரங்களில் சொன்னபடி நடக்க வேண்டும். சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதை எப்படி அனுஷ்டானம் செய்வது என்று பெரியவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். நாங்கள் அதற்குத்தான் இருக்கிறோம்.

கேள்வி: பாரத நாடு முழுவதும் இந்து மதம் கடைப்பிடிக்கப்பட்டு வந்தாலும் இன வேற்றுமையாலும் மொழி வேற்றுமையாலும் பிரிந்து போயிருக்கிறோம். நாம் சகோதரர்கள் என்ற எண்ணம் வளர என்ன செய்ய வேண்டும்?



" பீடாதிபதி பாரதீ தீர்த்த சுவாமிகள்.'

பதில்: முன்னேயெல்லாம் விட இப்போது ஜாதி ஞாபகம் அதிகரித்துள்ளது. அரசாங்கம் ஜாதி கேட்பதை விட்டு விட்டால் சண்டையே கிடையாது. ஏழைகளாய் இருக்கிறவர்கள் எல்லோருக்குமே உதவி பண்ண வேண்டும். என்ன விண்ணப்பம் எழுதினாலும் ஜாதி என்னவென்று குறிப்பிடச் சொல்கிறார்கள். அப்புறம், பூசல்கள் ஏற்பட்டால் எங்களைக் குற்றம் சொல்கிறார்கள். படித்தவர்கள் எல்லோரும் ஜாதியைப் பற்றி எழுதுவதை விட்டுவிட்டால் சரியாகப் போய்விடும். ஆதிசங்கரர் நாலா திசைகளிலும் மடங்களை ஸ்தாபித்தார். ஒற்றுமை ஓங்க வேண்டும் என்பதற்காகத்தான் செய்தார்.

கேள்வி: மத்தியதரக் குடும்பங்களில் பெண்கள் கூடிய வரையில் நமது பண்பாட்டைப் பின்பற்றி வருகிறார்கள். பூஜைகள், விரதங்களைக் கடைப்பிடிக்கிறார்கள். பெண்கள்தான் கலாசாரத்தின் காவலர்கள் என்று பேசுகிறார்களே தவிர சினிமாவிலும் விளம்பரங்களிலும் அவர்கள் ரொம்ப இழிவு படுத்தப் படுகிறார்கள். இந்த நிலையில் படித்த பெண்களின் கடமை என்ன?

பதில்: ஸ்திரீகளுக்குத் திடசித்தம் வேண்டும். குருவிடம் பக்தி இருந்தால் போதும். மற்றதெல்லாம் தானாக வரும். சினிமாவைப் பார்த்து அந்த மாதிரி குழந்தைகள் நடக்கப் பார்க்கிறார்கள். கெட்டுப் போகிறார்கள். பெண் குழந்தைகள் நம் வழக்கப்படி பாவாடை, தாவணி, புடைவை என்று உடுத்தினால் லக்ஷ்மீகரமாக இருக்கிறது. சினிமா பார்த்து விட்டு வரும் குழந்தைகளிடம் நிறைய பேசுங்கள். அதெல்லாம் மாயை என்பதை உணர்த்துங்கள். பொழுது போக்குக்குச் சரி; வாழ்க்கைக்கு உதவாது என்று சொல்லுங்கள்.

கேள்வி: குழந்தைகளுக்கும், கணவனுக்கும் சிரத்தை இல்லாவிட்டால் குடும்பத் தலைவிக்கு மனம் தளர்ந்து போய் விடுகிறதே?

பதில்: தளரவிடவே கூடாது. புருஷர்கள் அனுசாரமாய் நடந்தால் கூட ஸ்திரீகள் பண்பாட்டை விடாமல் கடைப்பிடித்தால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நிச்சயமாகப் புருஷனின் மனம் மாறும். சிரத்தை வரும். குழந்தைகளைச் சரியாகப் பழக்க வேண்டும். அவர்களுக்கு முன் உதாரணமாக நாம் இருக்க வேண்டும். ராமாயணம், பாரதம் போன்ற கதைகளைச் சொல்ல வேண்டும். அவர்களுக்குப் பிடிக்கா விட்டால் கூட தர்ம நியாயத்தையும் பண்பாட்டையும் அவர்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். 'இதை உனக்குச் சொல்ல வேண்டியது என் கடமை' என்று சொல்லிவிட்டு நல்லதை எடுத்துக் கூற வேண்டும். நாளடைவில் சரியாகி விடுவார்கள். குழந்தைகளிடம் பேச பெற்றோர் நேரம் ஒதுக்கிக் கொள்ளாததாலேயே பல குழந்தைகள் கெட்டுப் போகிறார்கள்.

கேள்வி: இளைய தலைமுறையினருக்கு நமது கலாசாரத்திலும் இந்து மதத்திலும் நம்பிக்கை குறைந்து வருகிறதே. மடங்கள் மடாதிபதிகளிடம் அவர்களுக்கு மரியாதையும் பக்தியும் இருக்குமா?

பதில்: நிச்சயமாய் விசுவாசம் போகாது. வெளி நாட்டுக்குப் போனால் தர்மமே போச்சு என்று ஒரு காலத்தில் சொல்லிக் கொண்டிருந்தோம். அங்கே போகிறவர்கள் இன்னும் அதிகமாகவே நமது பண்பாட்டைக் கடைப்பிடிக்கிறார்கள். கிராமங்களிலே ருத்ரம் சொல்ல ஒருவர் இருவர்தான் கிடைக்கிறார்கள். நாகரிகம் மிக்க பம்பாயில் ருத்ரம் சொல்ல வேண்டுமானால் ஆயிரம் பேர் உடனே வருவார்கள். இன்ஜினியராகவும், ஆபீஸராகவும் அரசாங்க உத்தியோகத்திலும் இருப்பவர்கள் வேதம் படிக்கணும் என்று ஆசையாகப் படிக்கிறார்கள். சென்னையிலேயும் இப்படித்தான். எனவே இளைய தலைமுறை பற்றியும் நாம் கவலைப்பட வேண்டாம். கொஞ்சம் விட்டுக் கொடுக்க வேண்டும். தர்ம வழியில் மனம் போகும்படி உற்சாகப்படுத்த வேண்டும். நாம் ரொம்பக் கடுமையாக இருந்தால் ஒதுங்கிப் போய் விடுவார்கள். சிநேக பாவத்துடன் அவர்களை அணுகி நல்வழிப்படுத்த வேண்டும்.

கேள்வி: வடமொழியில் வேதங்களும் உபநிடதங்களும் இருக்கின்றன. சங்கர பகவத் பாதாளின் நூல்களும் வடமொழியில்தானே இருக்கின்றன? ஸம்ஸ்க்ருதத்தினால் இந்துக்களிடையே ஒற்றுமை ஏற்பட வழியிருக்கிறதா?

பதில்: நிச்சயமாய் இருக்கிறது. ஸம்ஸ்க்ருதம் தேசிய மொழியாகும் தகுதியுடையது. 'வியாகரணம் இருக்கிறதே' என்பார்கள். எல்லா பாஷைகளுக்கும் இலக்கணம் இருக்கிறது. இங்கிலீஷுக்கு இல்லையா? அதை எப்படியோ படித்து விடவில்லையா? மனஸ் வேணும். சிரத்தை இருந்தால் நன்றாகப் படிக்கலாம். ரொம்ப அழகான பாஷை.

கேள்வி: அணு ஆயுதப் பிரச்னை உலகத்தையே கவலைக்குள்ளாக்கி வருகிற இந்த நாளில் மதம் ஒரு அர்த்தமுள்ள சக்தியாகச் செயல்படுகிறதா?

பதில்: நம்முடைய மதம் யாரையும் ஹிம்ஸை பண்ணக் கூடாது என்று சொல்கிறது. அஹிம்ஸா பரமோ தர்மஹ என்பது நமது கொள்கை. இதை அழுத்தமாகச் சொல்கிறோம். இது ஸகல மதத்தினருக்கும் பொதுவான கொள்கை. அனுசரிக்க வேண்டும்.

கேள்வி: தெய்வ நம்பிக்கையைக் குலைத்து வரும் நாஸ்திக வாதம் ஒருபுறம், மதம் மாற்றும் மற்ற மதங்களின் செல்வாக்கு ஒரு பக்கம். இவை இந்து மதத்துக்கு எதிராகச் செயல்பட்டு வருகின்றன. வேத மதத்தில் பற்று உள்ளவர்களுக்கு இதை எதிர்த்துப் போராடச் சக்தி இருக்கிறதா?

பதில்; மற்ற மதங்களுக்கு ஏன் போகிறார்கள்? தன் மதத்தை நன்றாக ஆராய்ந்து

பார்த்து 'இது பிரயோஜனமில்லை' என்று தீர்மானம் செய்தா? அல்லது மற்ற மதத்தைப் படித்து ஆராய்ந்து இதுதான் உயர்ந்த மதம், என்ற முடிவுக்கு வந்தா? இரண்டும் இல்லை. ஏதோ ஒன்றுக்கு ஆசைப்பட்டு ஒரு பலவீனமான மனநிலையில் மாறிவிடுகிறார்கள். இதனால் ஒரு நாளும் நமது மதத்தின் செல்வாக்கு குறையாது. இதே நேரத்தில் அந்த பலவீனமான மனநிலை அவர்களுக்கு ஏன் ஏற்பட்டது, அதற்குக் காரணம் என்ன என்பதை நாம் ஆராய்ந்து அதைப் போக்கவும் முயற்சி எடுக்க வேண்டும்.

கேள்வி: புதிது புதிதாகக் கோவில்களைக் கட்டுகிறார்கள். ஆயிரம் வருஷங்களாக இருக்கும் சில கோவில்களில் ஒரு தீபம் ஏற்ற வழியில்லை. புதுக் கோயில்கள் கட்டுவது அவசியமா? இருக்கிற கோவில்களைப் பராமரித்தாலே போதாதா?

பதில்: கோவில் கட்டினவர்கள் இப்போது கோவிலில் பூஜை நடந்தால் போதும் என்று வைக்கவில்லை. என்றென்றும் கோவிலைப் பராமரிக்கவும், பூஜைகள் நன்றாக நடக்கவும் வேண்டிய சொத்துக்களை வைத்துவிட்டுத்தான் போயிருக்கிறார்கள். தலைமுறை தலைமுறையாகக் கோவிலைப் பார்த்துக் கொள்ள குடும்பங்களை ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஆனால் யாரும் கோவிலுக்குச் சேர வேண்டியதைச் செலுத்துவதில்லை. சுயநலம் மேலோங்கி விட்டது. இதைக் கவனித்து சட்டபூர்வமாகச் சீர்திருத்தினால் எல்லாம் சரியாகிவிடும். புதிய கோவில்கள் எதற்கு என்ற கேள்வி எழாது. புதிய கோவில்களை ஒருவரே கட்டிவிட முடியாது. பல பேர் கூட்டுச் சேர்ந்து ஒத்துழைத்தால்தான் நடக்கும். இது சமுதாய ஒற்றுமையை பலப்படுத்துகிறது. கோவிலைக் கட்டியவர்கள் மட்டும் கும்பிடுவதில்லை. சுற்றுவட்டாரத்தில் உள்ள எல்லோரும் தரிசனத்துக்கு வருகிறார்கள். நித்திய பூஜைகள், விசேஷ ஆராதனைகளுக்கு நல்லவிதமாக ஏற்பாடுகள் நடக்கின்றன. இதற்கும் மக்கள் ஒத்துழைக்கிறார்கள். சமுதாயத்தில் பக்தியையும் வளர்ப்பதாகிறது. புதிய கோயில்களால் இப்படி இருவித பயன்கள் கிட்டுகின்றன. மனச்சாந்தியும் திருப்தியும் ஒரு காரியத்தைச் சாதித்த பெருமையும் பங்கேற்றவர்கள் அடைகிறார்கள். இதைத் தடுக்க வேண்டிய அவசியமென்ன? தோட்டத்தில் ஒரு செடி பட்டுப் போய்க் கொண்டிருக்கிறதே என்பதற்காகக் கவலைப்பட்டு இன்னொரு இடத்தில் புதிய செடியை நடாமல் இருப்போமா என்ன?

— நிருபர்

# ஒரு பிரீமியம் செலுத்திப் பல பாலிஸிகள் பெறுவது எப்படி?




இந்தியாவிலேயே மிக அதிகமான தொகைக்குப் பாலிஸிகளை எல்.ஐ.ஸி. சார்பில் விநியோகித்துப் பாராட்டுப் பெற்றவர் பிரஸன்னா. அடுத்தடுத்து இரு ஆண்டுகளில் இச்சாதனையை அவர் புரிந்திருப்பதால் எல்.ஐ.ஸி. சென்னைக்கும் தெற்குப் பிரிவுக்கும் பெருமையோ பெருமை. இப்போது ஒரு புதிய திட்டத்தைப் பிரஸன்னா அறிமுகப்படுத்தியிருக்கிறார்.



• பிரஸன்னா

இதன்படி ரூ. 20,000 அல்லது அதற்கு அதிகமாக நீங்கள் ஒரு பாலிஸி எடுத்து மூன்று ஆண்டுகள் அல்லது அதற்கு அதிகமாக பிரீமியம் செலுத்தியிருக்க வேண்டும். அந்தப் பாலிஸியில் கடன் பெற்று அதனை ஸ்ரீராம் டிரஸ்ட்டில் முதலீடு செய்கிறீர்கள். எல். ஐ. ஸி. 9 சதம் வட்டி வாங்குகிறது. ஸ்ரீராம் டிரஸ்டோ 15 சதம் வட்டி தருகிறது! பாலிஸிதாரருக்கு 6 சதம் வட்டி லாபம். இதுதான் உங்களுக்கு உதவப் போகிறது. எப்படி? 15 சதம் வட்டியும் நீங்கள் எடுக்கப் போகிற ஒரு புதிய பாலிஸிக்குப் பிரீமியமாகச் செலுத்தப்படும். மூன்று ஆண்டுகள் சென்று இந்தப் புதிய பாலிஸி மீதும் கடன் பெற முடியும். அதில் எல். ஐ. ஸிக்குச் செலுத்த வேண்டிய வட்டி கழித்து மீதத்தை மீண்டும் ஸ்ரீராம் டிரஸ்ட்டில் முதலீடு செய்து மூன்றாவதாக ஒரு பாலிஸி எடுக்கலாம். இப்படியே மூன்று ஆண்டுகளுக்கு ஒரு முறை புதிய பாலிஸி ஒன்று எடுத்துக் கொண்டு போகலாம். ஆக மொத்தம் ஒரு பாலிஸிக்கு மட்டும் பிரீமியம் செலுத்திப் பல பாலிஸிகளைப் பெறுகிறீர்கள். ஆயுள் காப்பு அதிகரிக்கிறது. போனஸ் பாதிக்கப்படுவதில்லை. வருமான வரிச் சலுகை அதிகரிக்கிறது. எல்லாப் பாலிஸிகளும் ஒரே சமயத்தில் மெச்சூர் ஆகும் போது ஸ்ரீராம் நிறுவனத்தில் டெபாஸிட்களும் மெச்சூர் ஆகும். எல். ஐ. ஸி. கடனை அடைக்க டெபாஸிட் தொகை போய் விட்டாலும்எல்லாப் பாலிஸித் தொகைகளும் முழுமையாக உங்களுக்குக் கிடைக்கும்.



அதுசரி, இதுபற்றி ஏன் இதுவரை யாரும் யோசிக்கவில்லை, நல்ல ஐடியாவாயிருக்கிறதே!

# ஆயிரத்தில் ஒருவராவது இருக்கிறாரே!

வட்டமேஜை

* ஆவுடையாபுரம் பற்றிய ஸ்பெஷல் ரிப்போர்ட்டால் விளைந்த செயல்களை அறிந்து மகிழ்கிறேன். பொதுவாக இதுபோன்ற கட்டுரைகளைப் படித்து விமர்சிக்கும் என் நண்பர்கள், "ஆமாம்! இவர்கள் குறைகளை எழுதியே காசாக்குபவர்கள்!" என ஏசுவதுண்டு. ஆனால் இந்த ரிப்போர்ட்டின் பலனை அவர்களுக்குக் காண்பித்த போது அவர்களால் பதில் பேச முடியாமல் போனது. புகை அரக்கனிடம் சிக்கிய மதுக்கரை கிராமமும் சீக்கிரமே நிவாரணம் பெறும் என நம்புவோம்.

நெல்லை — 1. ஜி. சதாசிவம்.

---

* ஏ. ஸி. ஸி. ஸிமெண்ட் ஆலைப் புகையால் பாதிக்கப்படுவது லட்சக்கணக்கான ஏக்கர் விவசாய நிலம். தங்களது பேட்டியில் ஏ.ஸி.ஸி. அதிகாரி கோபிசந்திரனின் பதில் எனக்கு மிகவும் வியப்பையும் அதிர்ச்சியையும் அளிக்கிறது. அவருக்கு இதற்கு முன் விவசாயத்தைப் பற்றி ஒன்றும் தெரியாமல் இருக்கலாம். ஆனால் இனியாவது அவர் ஊழியம் புரியும் தொழிற்சாலையினால் எத்தனை ஆயிரம் விவசாயிகள் இரத்தக் கண்ணீர் வடிக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள முயற்சி செய்யட்டும்.

உலகுக்கெல்லாம் உபதேசம் செய்யும் பால்கிவாலாவின் தலைமையில் இயங்கும் நிறுவனமாகிய ஏ.ஸி.ஸி. ஆலையின் புகையால் விவசாயிகளும் விவசாயமும் கொடுமையான விதத்தில் பாதிக்கப்பட்டும் அரசு அதிகாரிகள் உறங்கிவிட்டார்கள் என்றால் அதற்குத் தூக்க மாத்திரையாக ஆனது என்ன?

டூன் பள்ளியையும், அதன் சுற்றுப்புறத்தையும் பாதித்த ஒரு ஸிமெண்ட் ஆலையை மூடச் சொல்லிச் சமீபத்தில் ராஜீவ் காந்தி ஒரு நடவடிக்கை எடுத்தார். இந்த மேற்கோள் காட்டிப் போராடினால் ஒரு வேளை முடிவு பிறக்குமோ?

பொள்ளாச்சி. சி. கே. சுப்பிரமணியன்.

---

* அப்பாடா...! பாலகிருஷ்ணனைப் போன்று ஆயிரத்தில் ஓர் அரசியல்வாதியாவது பாராட்டைப் பெறும் அளவிற்குத் தொகுதி மக்களுக்காக உண்மையாக உழைக்கிறாரே!

நெல்லிக்குப்பம். ஜெ. முகம்மது பாரூக்.

* 'விடுதலைப் புலிகளின் வீரசாகசங்கள்' பற்றி எழுதிப் பணம் பண்ணும் பத்திரிகைகளுக்கிடையே உண்மையைத் தயங்காமல் எடுத்துச் சொன்ன கல்கியின் தலையங்கம் அருமை.

திருச்சி — 16. கே. கணேஷ்.

* ஆளும் கட்சி எம்.எல். ஏ. வுடன் பேட்டியைப் படித்துவிட்டு ஒரே குழப்பம்தான் வந்தது. இவர் திட்டவட்டமாக எந்தக் கொள்கையைக் கடைப்பிடிக்கின்றார்? "தடி எடுத்தவன் எல்லாம் தண்டல்காரன்" என்ற பழமொழிதான் நினைவுக்கு வருகின்றது.

சிதம்பரம். ஆர். தமிழரசி தேவசேனாபதி.

* நெகமம் கந்தசாமியின் வாதத்தில் நேர்மை இல்லையே! ஒரு கையில் லஞ்சம் வாங்குவதை ஏற்றுக் கொள்கிறாரே!

சென்னை — 39. சி. தெ. இளமுருகன்.

* கடந்த சில வாரங்களாய் நாளிதழ்களில் அடிபடும் 'என்செபலைடிஸ்' எனும் மூளைக் காய்ச்சல் பற்றிய முழு விவரங்களையும் டாக்டர் பி. ராமமூர்த்தி அவர்களின் பேட்டி மூலம் வெளியிட்ட கல்கிக்கு நன்றி!

மைசூர். பி. தங்கவேலு.

* நடிகரின் கட் அவுட்டுக்குக்குடம்குடமாகப்பாலாபிஷேகம் செய்யும் அளவிற்கு மூடநம்பிக்கை கொண்ட ரசிகப் பெருமக்களை நாம் வேறு நாட்டில் காண முடியாது என்று வாசகர் பட்டிமன்றத்தில் எழுதியுள்ளார் ஒருவர். வேறு நாடு வரை ஏன் போக வேண்டும்? நம் நாட்டிலேயே, தமிழ்நாட்டைத் தவிர, வேறு எந்த மாநிலத்திலும் காண முடியாத அவலம் இது!

பம்பாய் — 19. எஸ். வி[illegible]சேகர்.

* 16.11.86 இதழில் பொன்னுண்டாம்பாளையத்தில் நிலவும் குடிதண்ணீர் பிரச்னை பற்றி எழுதியிருந்தீர்கள். ஒரு மகிழ்ச்சியான செய்தி:

தற்போது கணியூர் பஞ்சாயத்து மட்டுமே அக்கறை எடுத்துக் கொண்டு கைபம்பைச் சரி செய்து கொண்டிருக்கிறார்கள். மேலும் சுமார் இரண்டு கி.மீ. தொலைவிலிருந்து குடிநீர் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டு, பைப் லைன் போடுவதற்காக, குழி வெட்டி வருகிறார்கள்.

பொன்னுண்டாம்பாளையம். கே. நாராயணசாமி.

---

## "காவல் துறையை மதிப்பவன் நான்!"

* கல்கி 16.11.86 இதழில் "சர்வாதிகாரியா, நானா?" என்ற தலைப்பில் என் பேட்டியை வெளியிட்டிருக்கிறீர்கள். இரண்டாவது பக்கத்தில் நான் காவல் துறை பற்றிச் சொன்னதாக உள்ள செய்தி திரித்து எழுதப்பட்டுள்ளது. அப்பாவிப் பெண்களைச் சிலர் கெடுத்துவிடும்போது காவல்துறை சரியான நடவடிக்கை எடுக்க முடிவதில்லை என்ற எனது ஆதங்கத்தை மட்டுமே வெளியிட்டிருந்தேன். அதற்கு அடுத்தபடியாக நான் ஏதோ செட் அப் செய்து காவல் துறை மீதே கேஸ் போடச் செய்வேன் என்று கூறியதாக எழுதப்பட்டிருப்பது முற்றிலும் தவறு. நான் காவல் துறையை எப்போதும் மேலாக மதிப்பவன்.

நெகமம். கே. வி. கந்தசாமி.



# தமிழ்நாட்டின் கல்வித்தரம்

வாசகர் பட்டி மன்றம் — 10

தமிழ்நாட்டில் கல்வித் தரம்

## நெஞ்சு நிமிரச் செய்கிறது!

முதல் பரிசு வாதம்

வெறும் ஐ.ஏ.எஸ்..தேர்வின் முடிவை வைத்துக் கொண்டே பார்க்காமல் பல்வேறு கோணங்களில் ஆய்ந்து பார்ப்போமேயானால் தமிழ்நாட்டின் கல்வித் தரம் எல்லோரையும் தலைநிமிர வைக்கும். காரணங்களில் சில:

1. தலைசிறந்த இன்ஜினியரிங் கல்லூரிகளில் ஒன்றான பிலானியில் உள்ள பிர்லா இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னலஜியில் இந்த ஆண்டில் சேர்க்கப்பட்டுள்ள சுமார் 600 மாணவர்களில் தமிழ்நாட்டிலிருந்து வந்த மாணவர்கள் மட்டுமே 200 க்குமேல் ஆவார்கள்.

2. I.C.W.A. போன்ற தேர்வுகளில் முதல் பத்து ராங்குகளில் குறைந்தது நான்கு அல்லது ஐந்து மாணவர்கள் கண்டிப்பாகத் தமிழர்களாக இருப்பார்கள்.

3. ஒரிரு ஆண்டுகளுக்கு முன்னால் மத்திய அரசின் எலெக்ட்ரானிக்ஸ் டிபார்ட்மெண்ட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட கம்ப்யூட்டர் பயிற்சி பெற்ற 200 பேரில் முக்கால் வாசிப் பேர்களுக்கு மேல் தமிழகத்தைச் சேர்ந்தவர்களே.

4. + 2 நிலையில் நாடு முழுவதும் கொண்டு வரப்பட்ட தொழிற்கல்வி முறையை ஒழுங்காகவும், வெற்றிகரமாகவும் செயல்படுத்துகின்ற ஒரே மாநிலம் தமிழகம்.

5. தொழிற் கல்வியை அதிக அளவில் கொண்டு வந்த மாநிலம் தமிழகம் என்று Draft தேசிய கல்விக் கொள்கைப் புத்தகம் அறுதியிட்டுக் கூறுகிறது.

6. தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனங்கள் வெளியிட்டுள்ள கணித, விஞ்ஞானப் புத்தகங்கள் தில்லியில் உள்ள சிறந்த தனியார் பள்ளிகளில் உபயோகிக்கப்படும் புத்தகங்களைக் காட்டிலும் (கல்வித் தரத்தில்) சிறப்பாக உள்ளன.

**வாசகர் தீர்ப்பு:**

| | |
|---|---|
| தமிழ்நாட்டில் கல்வித் தரம் நெஞ்சு நிமிரச் செய்கிறது | 10% |
| தமிழ்நாட்டில் கல்வித் தரம் தலைகுனிய வைக்கிறது | 90% |

7. சிறந்த ஊக்கமும் சரியான வழிகாட்டியும் இருந்தால் தமிழக மாணவர்களும் ஐ.ஏ.எஸ். தேர்வில் நிறைந்த அளவில் வெற்றி பெறுவது உறுதி.

— எம். சாம்பா பெருமாள், தில்லி — 34.

அடிப்படை வசதிகளான பள்ளிக்கூடக் கட்டிடம், கரும் பலகை போன்றவை இல்லாதது; இத்தனை மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் என்ற நிலையில் குறைபாடு; பள்ளி சென்று வரப் போக்குவரத்து வசதி இன்மை; ஆகிய இவைகளையெல்லாம் மீறி இன்று இந்தியாவில் எந்தவிதப் போட்டிகள் நடைபெற்றாலும் தமிழ்நாட்டுப் பள்ளி மாணவ மாணவியர் கலந்து கொண்டு பரிசு பெறுவது தமிழ்நாட்டில் கல்வித்தரம் உயர்ந்துள்

ளது என்பதையே காட்டுகின்றது. இலவச மதிய உணவு, இலவச உடை, இலவச புத்தகம், கல்வி என்று அளிக்கப்படுவது பெருமிதத்துக்குரியது அகில இந்தியாவில் தமிழ்நாட்டு மாணவனின் ஐ. கியூ. அதிகம் என்பது அனைவராலும் ஏற்கப்படும் ஒரு கருத்து.

— வெ. உஷாராணி, பொன்னேரி.

தற்போது ஏறத்தாழ 5 கி. மீ. தூரத்துக்கு ஓர் உயர்நிலைப் பள்ளியும், 10 கி.மீ. தூரத்துக்கு ஒரு மேல்நிலைப் பள்ளியும், 30 கி.மீ. தூரத்துக்கு ஒரு கல்லூரியும் தமிழ்நாட்டில் உள்ளன. தொடக்கப் பள்ளி இல்லாத கிராமமே இல்லை எனக் கூறலாம். ஆக இன்று கல்வி பரவலாக்கப்பட்டிருக்கிறது. மேலும், முன்பு இண்டர்மீடியட்டில் படித்த பாடங்களை இன்று எட்டாவது வகுப்பு மாணவன் படிக்கிறான்., பிளஸ் டூ இரண்டாம் ஆண்டு கணிதத்தில் தற்போது மாணவர்கள் பயிலும் வெக்டர் அல்ஜிப்ரா என்ற பகுதி 1957 க்கு முன்பு ஒரு சில முதுகலைப் பட்டதாரிகளுக்கு மட்டும் தெரிந்த பாடம். எடுத்துக் காட்டுக்கு இவை போதும்!

— ஜே. ராஜகோபாலன், மன்னார்குடி — 1.

1976 க்கும் 1986 க்குமிடையே ஒரு மகத்தான மாறுதல் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. தொழில்துறைக் கல்விகளுக்குத் தேவையான நுண் சாதனங்கள் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு, மாணவனின் அறிவு வளர்ச்சிக்கு உபயோகப் படுத்தப்படுகின்றன. கொஞ்ச நாட்களுக்கு முன்னால் அக்பரின் ஆட்சிமுறையையும், பாபரின் பேரரசையும் படித்துக் கொண்டு பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தவன், இன்று எலக்ட்ரானிக் சாதனங்களுடன் கைகோத்து விளையாடுகிறான். கால்குலேட்டர், கம்ப்யூட்டர் போன்ற பல நவீன சாதனங்களின் தொடர்பு, தமிழகத்தில் கல்வித்தரம் முன்னேறிக் கொண்டிருப்பதற்குச் சான்று.

— பி. எம். பிரபாகரன், திருமங்கலம்.

கல்வித்தரம் என்றதும் இரு கேள்விகள் எழுந்தன. பாடத் திட்டத்தின் தரமா? மாணவர்களின் அறிவுத்தரமா?

1972 ஆம் ஆண்டு எஸ். எஸ். எல். ஸி. படித்தபோது நான் கற்றுக் கொண்ட விஷயங்களைவிட அதிகமான விஞ்ஞான, தொழில் நுட்ப விஷயங்கள் இன்றைய 10 ஆம் வகுப்பிலேயே போதிக்கப்படுகின்றன. தில்லியில் பணி புரியும் எனக்கு நமது கல்வித் தரத்தை மற்ற மாநிலங்களிலிருந்து பயின்று வந்துள்ளவர்களோடு ஒப்பிடும் வாய்ப்பு உண்டு. தமிழக மாணவர்களின் இன்றைய தரத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் அதிலும் நெஞ்சு நிமிரத்தான் செய்கிறது.

— எஸ். தங்கவேல், புதுதில்லி.

"அந்தக் கால ஸ்கூல் ஃபைனல் நான். என்னைப் போல இங்கிலீஷில் எழுத இந்தக் கால எம். ஏ. யால் முடியுமா?" — பாவம், ஆங்கிலக் கல்வி அறிவு மட்டுமே கல்வித்தரம் என்று நினைக்கும் அப்பாவிகளின் குற்றச்சாட்டு இது! "அவர்களே சொல்லுவார்கள், எனக்குத் தமிழில் பேச வராது!" என்று! உண்மைதான். இந்தக் கால ஏழாம் வகுப்புத் தமிழறிவு அந்தக் கால எம். ஏ. தமிழறிவுக்கு ஈடாகுமா?" மொழியறிவு மட்டுமே கல்வி என்று நினைத்தது அந்தக் காலம்! இன்றையக் கல்வி, மாணவரின் முழு ஆற்றலையும் வெளிக் கொணர்ந்து முழுமையான ஆளுமை வளர்ச்சிக்கு அடிகோலுவதற்கு வழி செய்தாக வேண்டும்... வழி செய்து வருகிறது...

— ஆர். பார்த்தசாரதி, இலக்குமிபுரம்

## தமிழ்நாட்டில் கல்வித் தரம் தலைகுனிய வைக்கிறது!

### முதல் பரிசு வாதம்

அறியாமையை அகற்ற வேண்டும் என்ற எண்ணத்துடன் பெருந்தலைவர் காமராஜரால் திறந்து வைக்கப்பட்ட கல்விக் கண் இன்று ஆழ்ந்த மயக்க நிலையில் இருக்கிறது. ஆத்திச்சூடி எழுதும் புத்தக அட்டையில் எல்லாம் ஆபாசப் படங்கள். ஆரம்பப் பள்ளிகளில் எல்லாம் புத்தச் மூட்டையோடு தட்டும் எடுத்துச் செல்கின்ற கொடுமையான நிலை. மேல்நிலைப் பள்ளி மற்றும் கல்லூரிகளில் எல்லாம் வேறொரு நிலை. இந்தி எதிர்ப்புக்கும் இலங்கைப் பிரச்னைக்கும் வருடந்தோறும் ஒதுக்கி வைக்கப்பட்ட விடுமுறைகள், இதெல்லாம் முடிந்து மாணவர்களுக்குப் படிக்கிற ஆசை வந்து பள்ளிகளுக்குச் சென்றால் ஆசிரியர்கள் எல்லாம் வரிசையாக நிற்கின்றனர்: ஊர்வலம் போக வேண்டுமாம்! பள்ளி, கல்லூரிகளின் அளவுதான் பெருகி இருக்கிறதே தவிர, தரம் என்னவோ பூஜ்யம் தான். இன்று பள்ளி, கல்லூரிகளில் எல்லாம் கொடும்பாவி கொளுத்தும் கொடுமையான நிலை. கல்விக் கண் திறக்கக் கல்லூரி சென்ற சரஸ்வதி தேவி ஓடி வந்துவிட்டாள் — மாணவர்களின் கையில் கொள்ளிக் கட்டையைப்



பார்த்து; தன்னைத்தான் கொளுத்த வருகிறார்கள் என்று!

இன்று கல்வியா? செல்வமா? என்று பட்டி மன்றம் நடத்த வேண்டாம். கல்விதான் செல்வம்; செல்வம்தான் கல்வி. பணம் படைத்தவன் எல்லாம் கல்லூரி திறந்து கொள்ளலாம். கையில் காசிருந்தால் டாக்டருக்குப் படிக்கலாம், இன்ஜினியருக்குப் படிக்கலாம். திறமையுள்ளவன் எவன் என்று கண்டுபிடிக்க, இவர்கள் எல்லாம் என்ன அமுல் டப்பாக்களா, ஐ. எஸ். ஐ. முத்திரை குத்த? ஜனநாயக நாட்டிலே விரும்பிய பாடத்தைப் படிக்க மாணவனுக்கு உரிமையில்லை. சாதியின் பெயரால் மாணவர்கள் சதுராடப்படும் அவலம்தான் எங்கும். அன்று படிக்கச் சென்ற மாணவர்கள் மதிய உணவு சாப்பிட்டார்கள். இன்று சத்துணவு சாப்பிடப் பள்ளிக்குச் செல்கிறார்கள். காமராஜரின் சமாதியோடு ஒழுங்கான, முறையான, தரமான கல்விக்குச் சமாதி வைத்தாகி விட்டது. இனி என்ன? வருடாவருடந்தான் சரஸ்வதிபூஜையன்றுபுத்தகங்களுக்குப் பொட்டு வைத்து, சாம்பிராணி காட்ட வேண்டும் என்ற அவசியம் இல்லை. தினமும் காட்டலாம்!

— வி. பாபு காமராஜ், திருவாரூர் — 1.

பள்ளி, கல்லூரித் தேர்வுகளிலே ஒழுங்கீனம் என்பது இன்று சர்வ சாதாரணம். அதில் ஆசிரியர்களின் பங்கு மிகுதி என்றாலும் பொது மக்களின் பங்கு அதைவிட அதிகம். விடைத்தாள் திருத்தும் மையங்களுக்கு ஆயிரக்கணக்கில் ரூபாய்களுடன் சென்று மதிப்பெண்ணை அதிகப்படுத்தும் பணியில் தீவிரமாகச் செயல்பட ஆரம்பித்து விட்டனர்.

— முருகமலை, சிவகாசி — 89.

போதிய போதனா வசதிகள், அறிவியல் சாதனங்கள் அற்ற பள்ளிக்கூடங்கள். 1:25 என்ற விகிதத்தில் ஆசிரிய மாணவர் இல்லாதது. மாணவ சக்திக்கு மீறிய பாடத் திட்டங்கள் (குறிப்பாக அறிவியல், கணிதம்) வேலை வாய்ப்புடன் கூடிய கல்வி பாடத் திட்டத்தில் இல்லை. வகுப்பு ஒன்று முதல் மூன்று வரை அனைவரும் பாஸ்; வகுப்பு மூன்று முதல் ஒன்பது வரை ஒவ்வொரு பாடத்திலும் 15 மதிப்பெண்களும் மொத்தம் நூறு மதிப்பெண்களும் பெற்றால் வெற்றி என்ற நிலைமை. வகுப்பறையில் போதிக்காமல் டியூஷன் மட்டும் போதிக்கும் ஆசிரியர்கள். அவ்வப்போது குழந்தைகள் முன்னேற்றம் குறித்து அக்கறை காட்டாத பெற்றோர். ஆசிரியரின் தகுதியறிந்து ஊதியம் வழங்காத நிலையில் அரசு. காலங்கடந்து, கால் ஆண்டு கடந்து வரும் புத்தகங்கள். குழந்தைகளுக்கான உணவுப் பொருளை, குடும்ப கார்டுடனேயே வழங்காத நிலைமை. தரமான உணவு என்னும் பெயரளவில் மட்டும் இருந்து, இடைத்தரகர்களோடு, அமைப்பாளர்களும் வாழ வழி செய்துவிட்ட நிலையில் சத்துணவுத் திட்டம். தரமுள்ள மாணவன் எந்த சமூகத்தை சார்ந்தவனாக இருப்பினும் உயர முடியாத நிலை.

— ஜி. இளங்கோவன், விழுப்புரம்.

தமிழகத்தில் வக்கீல்களின் தரமும், திறமையும் மிகவும் தாழ்ந்து போய் இருக்கிறது என்று வக்கீல் சங்க ஆய்வு ஒன்று தெரிவிக்கிறது. அகில இந்திய தேர்வுகளில் நமது மாணவர்கள் தேர்வுபெற முடியவில்லை. ஐ. ஏ. எஸ். தேர்வுகளின் பெயர்களில் தமிழர்களின்பெயர்களைக்கஷ்டப்பட்டுத்தேட வேண்டிய நிலையில் நாம் இருக்கிறோம். எந்த மாநிலமாக இருந்தாலும் சரி, பெரிய பெரிய பதவிகளில் இருப்பது தமிழர்கள்தான் என்ற நிலை மாறித் தமிழகத்திற்கே கூடத் திறமை வாய்ந்தவர்கள் வேண்டுமானால் வேறு மாநிலத்திலிருந்துதான் கொண்டு வர வேண்டும் என்கிற நிலை கொஞ்சம் கொஞ்சமாக வ்ந்து கொண்டிருப்பது வேதனைக்குரியது.

— எம். ஜி. சேகர், ஜீயபுரம் — 1.

மாணவர்கள் பாட புத்தகங்கள் மற்றும் guides ல் இருந்து வெட்டி எடுக்கப்பட்ட துண்டுகளை வைத்துக் கொண்டு பார்த்து எழுதுகின்ற பழக்கம் பட்டி தொட்டி முதல் பட்டணம் வரை பரவியுள்ளது. உடல் முழுவதும் Bits மயம். இதனைக் கண்டிக்கின்ற தேர்வறை மேற்பார்வையாளர் ஆண் அல்லது பெண் யாராக இருந்தாலும் வெளியில் வந்த பிறகு அவர்களைத் தாக்கி மானபங்கம் செய்கின்ற ரௌடிக் கூட்டத்தைக் கேட்பதற்கு ஆளில்லை. பல ஆசிரியர்களே இதற்குத் துணை போவது அதைவிட வேதனை. மாணவன் தன் கைக்கு வினாத்தாள் வந்தவுடன் மடமடவென்று ஒரு துண்டில் முக்கிய வினாக்களை எழுதிச் சன்னல் வழியே போடுகிறான். அதனை வேறு ஒரு மாணவன் வேகமாக எடுத்துச் சென்று ஆசிரியர்களிடம் கொடுக்கிறான். அதற்கு ஆசிரியர்கள் கார்பன் பேப்பர்களை வைத்து விடைகளைத் தயார் செய்து அந்த மாணவனிடம் கொடுத்தனுப்பி தம் பள்ளி மாணவர்களுக்கு மட்டும் கொடுக்கச் சொல்லுகிறார்கள். நான் நேரில் பார்த்த நிகழ்ச்சிகளில் இதுவும் ஒன்று.

— பா. பாலகிருட்டிணன், திருவாலங்காடு

அஞ்சல் வழி பல்கலைக்கழகங்கள் அனுப்பும் பாடங்களில் ஏன், சுற்றறிக்கைகளில் கூடத் தவறுகள் இருக்கின்றன! அரசின் பாட நூல் துறை வெளியிடும் நூல்களில் கூட (தமிழ் மொழியில்) பிழைகள் இருக்கின்றன. உதாரணத்துக்குப் பத்தாம் வகுப்பு விஞ்ஞானப் புத்தகம் ஒன்று போதும்.

புற்றீசல் போல் கிராமங்களில் கூட 'இங்கிலீஷ்' ஸ்கூல்கள்! அதை 'இங்லீஷ்' என்று உச்சரிக்க வேண்டும் என்பது கூட எத்தனை 'இங்கிலீஷ்' ஸ்கூல்காரர்களுக்குத் தெரியும்? ஏன் இத்தனை 'இங்கிலீஷ்' ஸ்கூல்கள்? இதைத் தடுக்க அரசு என்ன செய்துவிட்டது? தரமாவது, மண்ணாங்கட்டியாவது!

— எஸ். சிவசங்கர், மன்னம்பந்தல்.

# சென்னையும் ஒரு செர்னோபில் ஆகுமா?

பிரிட்டிஷ் பிரதமர்கள் வாழும் இல்லத்தின் விலாசம்: 10, டௌனிங் தெரு. எந்தப் பிரதமர் என்று பதவிக்கு வந்தாலும் இதே வீடுதான். சில காலம் முன்பு டௌனிங் தெருவில், "பீப்! பீப்! பீப்! பீப்!" என்று ஒரே சத்தம்!-காதைக்கிழித்த இந்த ஓசையைக் கேட்டு விட்டு அக்கம்பக்கத்தில் போய்க் கொண்டிருந்தவர்கள் ஓட்டமாய் ஓடிவந்து ஒரே கூட்டமாகச் சேர்ந்து விட்டார்கள். பார்த்தால், பிரதமர் வீட்டருகே நடைபாதையில் நன்கு ஸீல் செய்யப்பட்ட பாலிதீன் பைகளில் ஒருவகை மணல் — மூட்டை மூட்டையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தது. அதன் அருகே, ஓர் இளம் விஞ்ஞானி 'கெய்கர் கவுண்டர்' என்ற ஒரு சாதனத்தைப் பிடித்துக் கொண்டு நிற்கிறார். அது எழுப்பும் 'பீப் பீப்' சத்தம் ஒலி பெருக்கியினால் பலமடங்குபெரிதாக்கப்பட்டுச்செவிப்பறைகளைத் தாக்குகிறது! கெய்கர் கவுண்டர் என்னும் அந்தச் சாதனம் என்ன? கதிரியக்கம் உள்ள பொருளின் அருகே சென்றால் அது இப்படி ஓசை எழுப்பும்! கதிரியக்கத்தின் அளவையும் கணித்துக் கொடுக்கும்! நடைபாதையில் பாலிதீன் மூட்டைகளில் இருந்த மணல் கதிரியக்கம் உடையது என்பது உலகுக்கெல்லாம் புரிந்து போயிற்று!

அப்புறம் கேட்க வேண்டுமா? ஒரே பரபரப்பு! பத்திரிகைகள், டீ. வி. முதலியவற்றில் காரசாரமான தாக்குதல்கள் — அரசின் அசிரத்தை பற்றி!

அந்த மணல் மூட்டைகள் எங்கிருந்து வந்தன? இளம் விஞ்ஞானி விளக்கினார்.

கடற்கரையோரமாக ஓர் அணுமின் நிலையம். அந்த நிலையம் அருகே கடற்கரை மணற்பரப்பைத் தாம் ஆராய்ந்த போது மணல் கதிரியக்கம் கொண்டதாக இருப்பது தெரிய வந்தது என்றார். கதிரியக்கம் மணலில் பரவக் காரணம் அந்த அணுமின் நிலையமாகத் தானே இருக்க வேண்டும்? இதனை அரசும் அதிகாரிகளும் மூடி மறைத்து மழுப்பிவிடுவதற்கு முன்னால் உலகுக்கு அம்பலப் படுத்திவிட வேண்டும் என்பதற்காகத் தாம் இப்படி ஒரு காரியத்தைச் செய்ததாக அந்த இளம் விஞ்ஞானி சொன்னார். ஆராய்ந்து பார்த்ததில் அவர்' கூறியது முற்றிலும் உண்மை என்று தெரிய வந்தது. அணு மின் நிலையத்தில் பிறகு தேவையான நடவடிக்கை எடுக்கப்பட்டுக் கசிவு தடுக்கப்பட்டது.

இப்படி பிரிட்டனில் நடக்கலாம். நமது நாட்டில்? அணு மின் நிலையத்திலிருந்து கதிரியக்கம் கசிகிறது என்றால் எத்தனை பேருக்கு அது தெரிய வரும்? அதைக் கண்டுபிடிக்கும் ஆற்றல் இங்கு யாருக்கு இருக்கிறது? சுற்றுப்புறச் சூழலைப் பாதுகாக்கும் அமைப்புக்கள் சில இங்கும் உள்ளன. ஆனால் அவற்றில் எத்தனை விஞ்ஞானிகள் இவ்வளவு நுணுக்கமான அறிவும் ஆய்வு மனப்பான்மையும் கொண்டு இயங்குகிறார்கள்?

எவ்வளவோ முன்னேற்றம் அடைந்துள்ள நாடுகளான அமெரிக்காவிலும் ருஷ்யாவிலுமே அணுமின் நிலையங்களில் விபத்துக்கள் ஏற்பட்டுக் கதிரிக்கக் கசிவு உண்டாகிறது. அமெரிக்காவில் 1979 இல் த்ரீ மைல் ஐலண்ட் என்ற இடத்தில் பெரிய விபத்து நடந்து கதிரியக்கம் பரவிய போது பல ஆயிரம் மக்கள் பாதுகாப்பு கருதி வேறு இடங்களுக்குக் குடிமாற்றப் பட்டனர்.

இந்த ஆண்டு ருஷ்யாவில் செர்னோபைல் என்ற இடத்தில் மிகப் பெரிய அணுமின் நிலைய விபத்து ஏற்பட்டது. அதனால் இறந்தவர்கள், நோயுற்றவர்கள் பல நூறு பேர் என்பது ஒருபுறமிருக்க, இந்தக் கதிரியக்கம் பரவுவதால் ருஷ்யாவில் மட்டுமின்றி ஐரோப்பாவில் கூட இன்னும் பல ஆண்டு

களுக்குப் பல ஆயிரம் பேர் புற்றுநோய் வந்து செத்துப் போவார்கள் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

அமெரிக்காவில் மட்டும் 1959 லிருந்து —86 வரை பன்னிரண்டு விபத்துக்கள் அணுமின் நிலையங்களில் மிகுந்த கவலையளிக்கும் விதத்தில் நடந்துள்ளன. இந்தக் கணக்கில் வராத சின்னச் சின்ன விபத்துக்கள் வேறு! ருஷ்யாவில் எத்தனை சிறிய, பெரிய விபத்துக்கள் நேர்ந்தாலும் வெளியே தெரிய வராது. செர்னோபைல் ஐரோப்பிய எல்லைக்குச் சமீபத்தில் இருந்ததால் ஐரோப்பிய விஞ்ஞானிகள், விஞ்ஞானக் கருவிகளிலிருந்து அதனை மறைக்க முடியாமல் போயிற்று!

இந்த நிலையில் நமது நாட்டின் அணு விஞ்ஞானிகள் — அணுசக்தி நிறுவனத் தலைவர்கள் என்ன சொல்கிறார்கள், தெரியுமா? 'செர்னோபைல் ரொம்பப் பழைய பாணி அணுமின் நிலையம்.' அதனால் அங்கு விபத்து நேர்ந்து விட்டிருக்கலாம். ஆனால் இந்தியாவில் எல்லாம் மிக நவீன அமைப்புக்கள். விபத்தோ, கதிரியக்கக் கசிவோ நேர வாய்ப்பே இல்லை'' என்கிறார்கள்! உண்மை என்னவெனில் நமது நாட்டிலும் அணுமின் நிலையங்களில் அவ்வப்போது விபத்துக்கள் நிகழத்தான் செய்கின்றன. சமீபத்தில் கூட கல்பாக்கத்தில் ஒரு விபத்து நேர்ந்து, கோளாறாகிப் போய் அது சரி செய்யப்படப் பல மாதங்கள் ஆயின. பெரிய விபத்தாக நடக்கவில்லை; கதிரியக்கம் பரவுகிற விதத்தில் விபத்து நடக்கவில்லை என்பது நம்முடைய நல்ல காலம், நல் அதிர்ஷ்டம்; அவ்வளவே! எப்போது விபத்து நேரக் கூடும் என்பது உறுதியோ, அப்போது கதிரியக்கம் பரவும் விதமாக நேரக்கூடும் என்பதையும் மறுப்பதற்கில்லை. எல்லா நிலையங்களும் மனிதர்களால் நிர்வகிக்கப்படுகிறவை. தவறு செய்யாத மனிதனே கிடையாது. தவறு செய்யக் கூடிய மனிதர் இருக்கும் வரை விபத்துக்கள் நேரக் கூடிய வாய்ப்பும் உண்டு.

பிரிட்டனில் மேன்மேலும் புதிய அணுமின் நிலையங்களை உருவாக்கிக் கொண்டே போவதை எதிர்த்து மக்கள் பலமான குரல் எழுப்பி வருகிறார்கள். செர்னோபைல் மாதிரி ஒரு விபத்து உலகில் சராசரியில் ஐந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை நிகழ வாய்ப்பு இருக்கிறது என்று விஞ்ஞானிகள் கருதுகின்றனர். ''அணுமின் நிலையங்களில் விபத்தே ஏற்படாது என்ற நம்பிக்கையின் அடிப்படையில் பிரிட்டிஷ் அரசு செயல்பட்டு வருகிறது; இது மாபெரும் தவறு; அபத்தமான கருத்து; இந்த மெத்தனம் கண்டனத்துக்குரியது'' என்று பிரிட்டிஷ் விஞ்ஞானிகள் பலர் சர்வதேச அணுசக்திக் கழகத்துக்குப் புகார் செய்துள்ளனர்.

செர்னோபைல் விபத்துக்கு ஐந்து மாதங்களுக்குப் பிறகும் பிரிட்டனில் வேல்ஸ் பகுதியில் ஆடுகளின் உடலில் கதிரியக்கம் பரவியிருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. ருஷ்ய விபத்துக்குப் பிறகு ஏராளமான தானியங்களும் காய்கறிகளும் கதிரியக்கம் கொண்டிருந்ததால் அழித்து ஒழிக்கப்பட்டன. 1983 இல் விண்ட் ஸ்கேல் என்னுமிடத்தில் குழந்தைகளுக்கு ரத்தப் புற்றுநோய் (லுகேமியா) வந்தது. ஏதோ ஓரிரு கேஸ்கள் அல்ல. நாட்டின் பிற பகுதிகளைவிட இங்கு பத்து மடங்கு அதிகமாகக் குழந்தைகளுக்கு வருவது தெரிய வந்தது. இதற்குக் காரணம் விண்ட் ஸ்கேல் என்ற அந்த இடத்தின் அருகே ஓர் அணுசக்தி நிறுவனத்தின் ஒரு பிரிவு (Reprocessing plant) இயங்குவது தான் என்று கண்டுபிடித்தார்கள்!

பிரிட்டனிலும் அமெரிக்காவிலுமே இந்த நிலை என்னும் போது நமது விஞ்ஞானிகள் 'ஆபத்தே இல்லை' என்று அடித்துக் கூறுவதில் என்ன அர்த்தமிருக்கிறது?

இந்தக் கதிரியக்கத்துக்காக ஏன் இவ்வளவு தூரம் பயப்பட வேண்டும் என்றால் காரணம் இருக்கிறது. விபத்துக்களுள் அதி பயங்கரமானதென்று சொல்லக் கூடியது அணுமின் உற்பத்தி நிலையங்களில் ஏற்படக் கூடிய விபத்துதான். இந்த விபத்துக்களின் உடனடி விளைவுகளையும் பின் விளைவுகளையும் நம்மால் கற்பனை கூட செய்து பார்க்க முடியாது.

அணுமின் நிலையங்களிலிருந்து கதிரியக்கம் காற்று மண்டலத்தில் கலந்து விட்டால் அதனைச் சுவாசிக்கும் மனிதன் எவ்வகையில் வேண்டுமானாலும் பாதிக்கப்படலாம்: சருமத்தில் எரிச்சல் ஏற்படலாம், சிவப்பு ரத்த அணுக்கள் தாக்கப்பட்டு அழியலாம்; உடலின் திசுக்கள் தாக்கப்படலாம், பல ஆண்டுகள் கழித்து கான்சர் வரலாம், உடலின் சில குறிப்பிட்ட செல்கள் பாதிக்கப்படுவதால் பல தலைமுறைகளுக்குப் பிறக்கும் குழந்தைகள் உடல் மற்றும் மூளைக் குறைகளோடு பிறக்கலாம்; நிரந்தரமான உடற்கூறு மாற்றங்கள் ஏற்பட்டு மனித இயல்பே மாறலாம். இவை எல்லாம் சங்கிலித் தொடர் போல் ஒன்றன் பின் ஒன்றாக நிகழலாம். மேலும் வேதனையான விஷயமென்னவென்றால், கதிரியக்கத்தின் பின்விளைவுகளுள் எது எப்பொழுது நிகழும் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல முடியாது!

அனல் மின் நிலையங்களில் ஏராளமான சாம்பல் கழிவுப் பொருளாக வெளியேற்றப்படுகிறது. அணுமின் நிலையத்தில், மின் உற்பத்தியின் போது வெளியேற்றப்படும் கழிவுப் பொருள் அளவில் குறைவானதாக இருந்தாலும் மிகுந்த வீரியம் படைத்த கதிரியக்கங்களுடன் கூடியது. இவற்றை உலகில் வெளியேற்றினால் இயற்கையே தலைகீழாகி உலகம் அழிவை எதிர்நோக்க ஆரம்பித்து விடும். இதனால் இக்கழிவுப் பொருட்களை வலுவான கான்கிரீட் பாத்திரங்களுக்குள் செலுத்திப் பூமிக்கு அடியில், ஆயிரக்கணக்கான அடி ஆழத்தில் புதைத்து வைத்துவிடுகிறார்கள். கழிவுப் பொருளின் தன்மையைப் பொறுத்துக் கதிரியக்கத்தின் வீரியம் குறைவதற்குப் பத்து விநாடிகள் முதல்

## அடுத்த இதழில்...

• சபிக்கப்பட்ட சென்னைச் சாலைகளுக்கு விமோசனம் உண்டா?

— கார்பரேஷன் கமிஷனர் சாந்தா ஷீலா நாயருடன் பேட்டி



ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வரையில் எவ்வளவு காலம் வேண்டுமானாலும் ஆக லாம்.

இப்படிப் புதைத்து வைக்கப்பட்டுள்ள கழிவுப் பொருட்களிலிருந்து சிறிதளவு வெளியே கசிந்துவிட்டால் கூட, அதனால் வெளிப்படும் கதிரியக்கம் நிலத்தடி நீரைப் பாதிக்கிறது. அந்தத் தண்ணீரைக் குடிக்கும் உயிரினங்கள் மட்டுமின்றி அதனால் விளையும் பயிர்களும் அவற்றை உண்ணும் மனிதர்களும் பாதிப்புக்கு உள்ளாகிறார்கள். இந்தக் கழிவுப் பொருளை மக்களுக்குத் தீமை செய்யாத விதத்தில் ஒழித்துக் கட்ட இன்று வரை திருப்திகரமான வழிமுறை கண்டறியப் படவில்லை.

கழிவுப் பொருட்களில் உள்ள கதிரியக்கம் ஏற்படுத்தக் கூடிய பாதிப்புகளைக் காட்டிலும் அணுசக்தி உற்பத்தியின் போது, உற்பத்தி ஸ்தானத்தில் அதிக ஆபத்து விளைய வாய்ப்பு இருக்கிறது. அணுமின் நிலையங்களில் அதிதீவிரமான கண்காணிப்பு ஒவ்வொரு விநாடியும் தேவை. அதோடு பாதுகாப்பு நடவடிக்கைகளும், அந்தப் பாதுகாப்பு நடவடிக்கைகள் தவறிவிட்டால் உடனடியாகக் கைகொடுக்கக் கூடிய மாற்றுப் பாதுகாப்பு நடவடிக்கைகளும் எப்போதும் தயாராயிருக்க வேண்டும்.

இந்தியாவில் செர்னோபைலில் நடந்தது போன்ற ஒரு விபத்து ஏன் சென்னையில் நிகழாது என்ற கேள்வி எழுகிறது. அணுமின் உற்பத்தித் துறையில் இந்தியா அடியெடுத்து வைத்துள்ளதே தவிர அது முன்னேற வேண்டிய தூரம் இன்னும் நிறைய இருக்கிறது.

தற்போது இந்தியாவில் இயங்கும் அணு ரியாக்டர்கள் மொத்தமின் சக்தி உற்பத்தியில் இரண்டு சதவிகிதத்தைத்தான் தயாரிக்கின்றன. பொருளாதார ரீதியில் இது எவ்வளவு தூரம் லாபகரமானது என்பதும் கேள்விக்குரிய விஷயமே. நிலக்கரி நம் நாட்டில் நிறையவே இருக்கும்போது, புதிய புதிய எண்ணெய்க் கிணறுகளும் கண்டுபிடிக்கப் பட்டு வரும்போது இன்னமும் ஆற்று நீரைப் பயன்படுத்தி நீர்மின் நிலையங்கள் உருவாக்க வாய்ப்புகள் இருக்கும்போது ஆபத்தான அணுமின் நிலையங்கள் அவசியமா?

ஆபத்துக்கள் பல இருப்பதால் அணுமின் உற்பத்தி தடை செய்யப்பட வேண்டும் என்று சொல்வது முட்டாள்தனம் என்பது ஒரு வாதம். இத்துறையில் மிகவும் முன்னேறியுள்ள ஃபிரான்ஸில் நாற்பது ரியாக்டர்கள் மொத்த மின் உற்பத்தியில் அறுபத்தைந்து சதவிகிதத்தைத் தயாரித்து வருகின்றன. அதோடு ஃபிரான்ஸ் பிற நாடுகளிடமிருந்து அணுமின் நிலையக் கழிவுகளைப் பெற்று, அவற்றைத் தகுந்த பாதுகாப்போடு 'அடக்கம்' செய்யும் பணியை ஒரு வியாபாரமாகவே செய்து வருகிறது!

இயற்கை வளங்களான நீர், எண்ணெய், நிலக்கரி போன்றவற்றுக்குப் பற்றாக்குறை உலகெங்கும் அதிகரித்து வரும் இந்நாட்களில் மாற்று ஏற்பாடாக அணுமின் உற்பத்தி பயன் தருகிறது. இதில் நாம் பின் தங்கி விட்டால் எதிர்காலத்தில் மிகவும் மின் தட்டுப்பாடு ஏற்பட்டுத் திண்டாடுவோம் என்பது ஒரு வாதம். சூரிய சக்தியைப் பயன்படுத்தி மின் உற்பத்தி செய்வதுதான் ஆபத்தில்லாத,மின் தட்டுப்பாட்டுக்கும் இடமில்லாத வழிமுறையாக இருக்கக் கூடும். ஆனால் இதனை மலிவாகத் தயாரிக்க இன்னும் நிறையவே ஆராய்ச்சிகள் செய்யப்பட வேண்டியிருக்கிறது.

பாதுகாப்பு முறைகளும், கதிரியக்கக் கசிவைக் கண்டறியும் முறைகளும் அணுமின் நிலையங்களில் நவீனப்படுத்தப்பட வேண்டும் என்று அதற்கு முயலும் விஞ்ஞானிகளும் இருக்கிறார்கள். அடங்காப்பிடாரியாக அலையும் ஒரு பிரம்மச்சாரிக்குக் கல்யாணம் செய்து வைத்து அவனைக் கட்டுப்படுத்தலாம் என்பார்கள். அதைப்போல், கட்டுக்கடங்காமல் கதிரியக்கச் சக்தியுடன் துடித்துக் கொண்டிருக்கும் அணுக்களைத் தாக்கி ( Bombard ) அச்சக்தியை அவை இழந்துவிடும்படி செய்ய இயலுமாயின் பாதுகாப்பை உறுதிப்படுத்திக் கொள்ளலாம் என்கிறார்கள். ஆனால் இதற்கு ஒரு வழிமுறை கண்டுபிடிக்கப்பட்டால் கூட நூறு சதவிகிதம் பாதுகாப்புக் கிடைக்குமா, சந்தேகம்தான்!

தகவல்கள், தொகுப்பு:

**சீதா ரவி**



அமெரிக்க புகைப்படக் ...



... கண்காட்சியில் ...

# காஷ்மீர் அரசியல் நாடகத்தின் பின்னணி என்ன :

* வ. முரளிநாதன், மணியம்பட்டு.

? போர் வீரனுக்கு வாள், பத்திரிகை ஆசிரியனுக்குப் பேனா, அரசியல்வாதிக்கு?

! மைக், ஆளுயரப் போஸ்டர்!

* இரா. வனையாபதி, தோட்டக்குறிச்சி.

? காஷ்மீரில் நடந்தேறியுள்ள அரசியல் நாடகத்தின் பின்னணியைக் கொஞ்சம் விவரியுங்களேன், பிளீஸ்?

! அன்னை செய்த தவறை மகன் திருத்தியிருக்கிறார். 1984 ஜூலையில் ஜி. எம். ஷா, ஃபாரூக் ஆதரவாளர்களைத் 'தம் பக்கம் 'இழுத்துக் கொண்டு' இ. காங்கிரஸ் ஆதரவுடன் பதவிக்கு வந்தார். அந்த அதர்மத்துக்கு இன்று ஃபாரூக் மறுபடி காஷ்மீர் முதல்வராக வழிவகுத்ததன் மூலம் ராஜீவ் பரிகாரம் கண்டிருக்கிறார். இ. காங்கிரஸ் — ஃபாரூக்கின் தேசிய காங்கிரஸ் கூட்டணி அமைச்சரவை உருவானதும் சட்டசபையைக் கலைத்ததன் மூலம் அனாவசியச் சண்டை பூசல்களுக்கும் கவிழ்க்கும் முயற்சிகளுக்கும் இடமில்லாமல் செய்யப்பட்டிருக்கிறது. அதே நேரத்தில் இடைத் தேர்தலுக்கும் வழிவகுக்கப்பட்டுள்ளது. எந்த விதமாகப் பார்த்தாலும் இது அதர்மச் சக்திகளுக்குப் பலத்த அடி. ஜனநாயகம் பலப்பட வழி.

* காசிதாசன், கீழ்கொவளவேடு.

? எழுத்தாளன் உண்மையிலேயே மகிழ்ச்சி அடைவது அவனது படைப்பு பத்திரிகையில் வெளிவரும் போதா, அல்லது அதற்கான சன்மானத் தொகையைப் பெறும் போதா?

! இரண்டு நேரத்திலும் இல்லை. யாரோ ஒரு முகம் தெரியாத மனிதர் அதைப் படித்து விட்டு, எழுதியவரே அறிந்திராத நயங்களை அதில் கண்டு பாராட்ட, யதேச்சையாக அதைக் கேட்க நேரும் போது ஏற்படுகிற ஆனந்தம் இருக்கிறதே... அடாடாடா!

* கே. ரமேஷ், மயிலாப்பூர்.

? ''உங்கள் பெயர்?''
சொன்னேன்.
''நட்சத்திரம்?''
''கோத்திரம்?''
சொன்னேன்கள் — இந்த நடை பற்றி உங்கள் கருத்து?

! 'தமிழை இந்தி வந்தா அழித்து விடப் போகிறது. ஆங்கிலத்தாலேயே அதை அழிக்க முடியவில்லையே?' என்று ஹிந்தி ஆதரவாளர்கள் கூறுவார்கள் — நாம் எதற்காக ஹிந்தியை எதிர்க்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ளாதது போல் நடித்து. தமிழை ஆங்கிலமோ இந்தியோ அழிக்கவே முடியாது; ஆனால் தமிழர்களால் தமிழை அழித்து விட முடியும் என்பதைத்தான் நீங்கள் சுட்டிக் காட்டுகிற நடை உணர்த்துகிறது.

* கே. ஆர். கமல்ஹாசப்ரியன், காரிமங்கலம்

? திருஷ்டிக்குப் பூசணிக்காய் வைப்பதேன்?

! அதில் பயங்கர முகம் வரைவது சுலபம். காசு உள்ளே போடுவது எளிது. கூடம் கொளுத்தினால் விழுந்து விடுமோ என்று

... இடம் பெற்ற படங்களில் சில.



பயப்படாமல் தூக்கிச் சுற்றலாம். சுலபமாகத் தெருவில் போட்டு உடைக்கலாம். அதில் எளிதாகப் பாதசாரிகளும் சைக்கிள் ஓட்டிகளும் ஸ்கூட்டர்காரர்களும் வழுக்கி விழலாம்!

* அ. மு. தாஜ்மஜீத், திருமயம்.

**? பெண் குலத்தின் பெருமைகளைக் கேலிக்குரியதாக்குகிறவர்களைத் தண்டிப்பதற்காகவும் ஆபாசத்தை ஒழிக்கவும் மத்திய அரசு சட்டம் கொண்டு வந்திருக்கிறதே?**

! ஓமர் முக்தார் மறுபடி திரையிடப் படுகிறதே என்று முன்னர் பார்க்காத தவற்றைத் திருத்திக் கொள்ளப் போனேன். இடைவேளைக்குப் பிறகு 'லேடி ஃபுட்பால்' என்ற படத்துக்கு டிரெய்லர். புளூஃபிலிம் அளவுக்கு மோசமான படு ஆபாசக் காட்சிகள். டிரெய்லரே இப்படி என்றால் படம்? முதலில்,இருக்கிற சட்டங்களையும் சென்ஸார் அதிகாரங்களையும் ஒழுங்காகப் பயன்படுத்தக் கற்றுக் கொள்ளட்டும். பெண்களை இழிவு படுத்தக் கூடாது என்று சட்டம் கொண்டு வருகிறார்களாம் சட்டம் — ஹூம் காதுல பூ!

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

**? இந்தித் திணிப்பை எதிர்த்துத் தமிழக அரசு கொண்டு வந்த சட்டத் திருத்தத் தீர்மானத்தைத் தாய்மொழிப் பற்றில்லாமல் தமிழக இ. காங்கிரஸ் எம். எல்.- ஏக்கள் எதிர்த்தது ஏன்?**

! அவர்களுக்குத் தாய்மொழிப் பற்றை விடப் பதவிப் பற்று அதிகமாக இருப்பது தான் காரணம்.

* மு. சுரேஷ்குமார், கும்மிடிப்பூண்டி. *

**? இந்தியக் கலாசார விழா — அப்னா உத்ஸவ் பற்றித் தங்கள் கருத்து என்ன?**

! அயல்நாடுகளில் 'இந்தியா விழா' என்று நடத்தினார்கள் பல கோடி செலவழித்தார்கள். பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளில் நடந்தன. செலவு அதிகம் தான் என்றாலும் அதை எதிர்காலத்துக்கான ஒரு முதலீடாகக் கருதலாம். செலவுக்கேற்ற வரவு உடனடியாக இல்லாவிட்டாலும் மக்களுக்கு இந்தியா பற்றிய ஏற்றமிகு எண்ணங்கள் ஏற்படுவதால் சுற்றுலாப் பயணிகள் வருகை அதிகரிக்கலாம். அயல் தேச வர்த்தகம் பெருகலாம். இதனாலெல்லாம் நாளடைவில் அந்நியச் செலாவணி கிடைக்க வாய்ப்பு உள்ளது. ஆனால் அதே பாணியில் 'அப்னா உத்ஸவ்' என்று தில்லியில் நடத்துவது வீண் பண விரயம்தான். ஒருமைப்பாடு உணர்வு ஏற்படுத்தட்டும்; வேண்டாம் என்று கூறவில்லை. அதற்காக ஐந்து கோடி செலவில் கூத்தடிக்க வேண்டாம். ஏற்பாடுகள் சரியில்லாததால் பங்கேற்கவும்பார்க்கவும்வந்தபலர் மனம்வெறுத்துத் திரும்பியுள்ளனர். செலவில் மத்திய அரசின் பங்கு மட்டும் ஐந்து கோடி. இதர அமைப்புகளின் செலவுகள் மேலும் ஒரு மூன்று நாலு கோடி இருக்கும். அத்தனை கோடியையும் ஒரே ஒரு ஹிந்தித் திணிப்புச் சுற்றறிக்கை பயனற்றதாகச் செய்துவிடும்.

* மனோபாரதி, பாண்டிச்சேரி.

**? திட்டம் — சட்டம் — வித்தியாசமென்ன?**

! கட்சித் தாவல் கூடாது என்பது சட்டம். ஆனால் இந்த 'நல்ல' சட்டத்துக்குள்ளே கட்சிக் கொறடாவை மீறிப் பேசுவதும் ஓட்டளிப்பதும் அல்லது வோட்டுப் போடாமலே இருப்பதும் கட்சி மாறியதாகக் கருதப்படும் என்று ஓர் அம்சத்தைச் சேர்க்கிறார்களே அது திட்டம்! ஜனநாயக உணர்வுகளைக் கொல்கிற, மனச்சாட்சியை மறக்கடிக்கிற திட்டம்!

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**? உலகளவில் சமீபத்தில் உங்கள் கவனத்தை வெகுவாகக் கவர்ந்த விஷயம் எது?**

! சென்னையில் நடந்த அமெரிக்க புகைப் படக் கண்காட்சி. அத்தனையும் கறுப்பு வெளுப்பு படங்கள்தான். ஆனால் அமெரிக்காவை, அமெரிக்க மக்களை எப்படியெல்லாம்நமக்கு அறிமுகப்படுத்தியது!ஒவ்வொரு படமும் ஒரு வீரமான, ஹாஸ்யமான, துயரமான, அல்லது மனத்துக்கு இதமான ஒரு கதையைக் கூறியது. அமெரிக்காவுக்கு நேரில் சென்றால் கூட இத்தனை பாதிப்பு ஏற்படுமா, சந்தேகம்தான். புகைப்படக் கலையில் உலகளவில் மன்னர்கள்!

**• ரூ. 10 பரிசு பெறுபவர்:**

**மு. சுரேஷ்குமார்,**
**கும்மிடிப்பூண்டி.**
**(விலாசம் தேவை)**

# அன்று 'தேசத் துரோகி' இன்று 'தீர்க்கதரிசி!'

1947 மத்தியில் ஸி. ஆருக்கும் காஸா சுப்பராவுக்கும் இடையில் நடந்த ஒரு கடிதப் போக்குவரத்து ஸி. ஆரின் குணச்சித்திரத்தை நமக்குப் 'பளிச்'சென்று எடுத்துக் காட்டுகிறது. ஸி. ஆரிடம் நெருங்கிப் பழகியிருந்த காஸா, ஸி. ஆரை விட வயதில் பல ஆண்டுகள் சிறியவர். 'சுதந்திரா' என்ற பத்திரிகையை அவர் நடத்தி வந்தார். பிரகாசத்தின் தீவிர ஆதரவாளர் காஸா.

சென்னை மாகாணத்தின் முதல்வர் பதவி பிரகாசம் கையிலிருந்து ஓமந்தூர் ராமசாமி



நவரத்ன ராமராவ்

காஸா சுப்பாராவ்

11

ரெட்டியார் கைக்கு மாறியது. அந்த மாறுதலின் பின்னணியில் ஸி. ஆரின் பங்கும் இருந்தது என்பதாகப் பேசப்பட்டதை அப்படியே ஏற்று, ஸி. ஆரைக் கடுமையாகத் தமது பத்திரிகையில் தாக்கினர், காஸா. ஸி. ஆரைச் 'சூழ்ச்சி புரிகிறவர்' என்றும் 'பதவி ஆசை உள்ளவர்' என்றும், அதிலும் குறிப்பாகச் 'சென்னை மாகாண முதல்வர் பதவியை மிகவும் விரும்புகிறார்' என்றும் குறிப்பிட்டிருந்தார். இதைப் படித்துவிட்டு ஸி. ஆர். காஸாவுக்கு ஒரு தபால் கார்டு எழுதினர்.

''அன்புள்ள காஸா, உங்களுடைய இலவசப் பிரதிகள் பட்டியலிலிருந்து என் பெயரை நீக்கி விடவும். எனக்கு அனுப்பப்பட்டு வரும் சுதந்திரா இதழை மிச்சம் பிடிக்கவும்.''

காஸா, ஸி. ஆரின் விருப்பப்படி தாம் நடப்பதாகப் பதில் எழுதினர். அத்துடன் நில்லாது மேலும் சில வரிகளும் சேர்த்தார்: ''நமது தலைவர்கள் பதவியிலும் அதிகாரத்திலும் உயரும் போது அவர்கள் விமர்சனத்தைத் தாங்க முடியாமல் தவிப்பதும் அதனை வெறுப்பதும் நமது தேசத்தின் துரதிர்ஷ்டம். உங்கள் தபால் கார்டு மூலம் நீங்கள் வெளிக்காட்டியுள்ள அற்பக் கோபத்தைச் சீக்கிரமே நீங்கள் வெற்றி கொண்டு உயரக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்!''

ஸி. ஆர். பதிலளித்தார்:

''நான் சகிப்புத்தன்மை அற்றவன் அல்ல. அதற்கு நேர்மாறானவன். நீங்கள் உங்களுடைய மனச்சாட்சிக்கு மதிப்பளிக்காமல் அதனை ஒதுக்கிவிட்டு, என்னைப் பற்றி உண்மையல்லாத விஷயங்களை எழுதுவதைப் பார்த்த போதுதான் எனக்குச் 'சீ' என்று போய் விட்டது. நீங்கள் பிரார்த்தனை பற்றிப் பேசுகிறீர்கள். உங்களுக்காக என்னைவிட அதிகமாகப் பிரார்த்திக்கும் ஒருவனை உங்களால் தேடிக் கண்டுபிடிக்க முடியாது. உங்களுக்கு மாறி மாறி நல்லதிர்ஷ்டங்கள் ஏற்பட்

டால் ஒவ்வொரு திருப்பத்திலும் என்னை விட அதிக மகிழ்ச்சி அடையும் வேறு ஒருவர் இருக்க முடியாது. இது சத்தியம்.''

இதற்குக் காலா, ''நல்லதிர்ஷ்டம் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். நான் இந்தக் கட்டத்தில் நல்லதிர்ஷ்டம் என்று கருதக் கூடியது, தங்களுக்கு மறுபடியும் சுதந்திரா பிரதிகளை அனுப்பி வைக்கலாம் என்று நீங்கள் எனக்குக் கோடி காட்டுவதுதான்'' என்று பதிலெழுதினார்.

ஸி. ஆரின் பதில்:

''அன்புள்ள காலா, உங்களுடைய சிறிய இனிய கடிதம் கிடைத்தது. உங்கள் விமர்சனம் என்னைப் புண்படுத்தவே இல்லை. விமர்சனத்துக்கு அப்பாற்பட்டு நீங்கள் எழுதியிருந்த வார்த்தைகள்தாம் என் மனத்தை நோகச் செய்துவிட்டன. என்ன எழுதியிருந்தீர்கள் என்பது வார்த்தைக்கு வார்த்தை சரியாக நினைவில்லை. ஆனால் விஷயம் மறக்கவில்லை. 'நான் கீதையைப் பற்றி அறிவுபூர்வ விளக்கவுரைகளை வழங்கிக் கொண்டே செயலில் அதனைப் புறக்கணிக்கிறேன்; இதன் மூலம் புனித கீதையை நான் இழிவான காரியத்துக்குப் பயன்படுத்துகிறேன்' என்பதாக எழுதியிருந்தீர்கள்.

''எனக்குச் சென்னை முதல்வர் பதவி மீது அவ்வளவு ஆசை என்றும் அதற்காகப் பிரகாசத்துக்கு எதிராக நான் சூழ்ச்சி செய்தேன் என்றும் நீங்கள் கற்பனை செய்து கொண்டீர்கள். இன்னமும் கூட அத்தகைய கற்பனையில் நீங்கள் இருக்கலாம். (ஆண்டவன் உங்களை மன்னிக்கட்டும்!) இதுதான் என் மனத்தை மிகவும் காயப்படுத்தி விட்டது. கடவுளுக்கு என் உள்ளம் தெரியும். நிஜமாகவே நீங்கள் எனக்குப் பெரிய தவறு இழைத்து விட்டீர்கள்.

''உங்களுக்குப் பிரகாசம் மீது அபரிமித அன்பு. அந்த அன்பு உங்களைத் திசை தவறி நடக்கச் செய்கிறது. பாதகமில்லை. உங்களுக்கு என் மீதும் துளி அளவு அன்பு இருக்கிறது என்பதைக் காண்கிற வரை நான் வருத்தப்பட மாட்டேன். இந்தக் கணத்தில் சிறிதளவு அல்ல, என் மீது உங்கள் அன்பு பெருமலையாகக் குவிக்கப்படுவதையே காண்கிறேன்.''

பத்து ஆண்டுகளுக்குப் பிறகு ஸி. ஆரின் மிகுந்த விசுவாசமுள்ள, சக்திமிக்க நண்பர்களில் ஒருவராகி அவருடன் மனத்தாலும் கருத்தாலும் எழுத்தாலும் ஒன்றினார் காலா.

இதற்கிடையில் சுதந்திரம் வெகு வேகமாக நெருங்கிக் கொண்டிருந்தது. ''இந்திய சுதந்திரம் உறுதியாகி விட்டது. அந்த உறுதிப் பத்திரத்தை நானே எனது கண்களால் பார்த்து விட்டேன். நான் இளைஞனாக இருக்கக் கூடாதா என்று ஆசைப்படுகிறேன்'' —இப்படித் தமது மெய்சிலிர்ப்பை எளிய, குழந்தைத்தனமான வார்த்தைகளில் வெளியிட்டார் ஸி. ஆர். அவரது கனவு, சென்ற நூற்றாண்டில் முதன் முதலாகக் கண்ட கனவு, இன்று நினைவாகிக் கொண்டிருந்தது. முப்பதாண்டுப் போராட்டம் — அவர் தமது வாழ்நாளின் பெரும்பகுதியை முழு முனைப்புடன் அர்ப்பணித்த போராட்டம் — வெற்றியில் முடிவுற்றுக் கொண்டிருந்தது. இனி இறக்க நேரிட்டால் கூட மகிழ்ச்சியோடு சாகலாம்!

வெற்றி மட்டுமல்ல; அவரது கருத்துக்கள் சரியானவை என்பதும் நிரூபணமாகி விட்டது! 1942 இல் அவரது யோசனைகளைத் 'தோல்வி மனப்பான்மை' என்றும், 'தேசத் துரோகமானது' என்றும் பழித்தார்கள். இன்றோ அவரைத் 'தீர்க்கதரிசி' என்றும், 'ராஜதந்திரி' என்றும் வர்ணித்தார்கள். சரித்திரம் அவர் சொன்னதே சரி என்று நிரூபித்து விட்டது. ஆனால் இதை எண்ணி அவர் மகிழ முடியாது. 1947 ஆம் ஆண்டின் எரிமலை வெடித்தது போன்ற சம்பவங்களுக்கிடையில் பெருமைப்படுவது என்பது முரண்பாடு மட்டுமல்ல, மதிப்பற்றதும் கூட. ஆனாலும் ஒரே ஒரு கடிதத்தில் அவர் தமது களிப்பை மறைக்க முடியாமல் எழுதியிருக்கிறார். நீண்ட நெடுநாள் நண்பரான நவரத்ன ராமராவுக்கு எழுதிய கடிதம் அது:

''இந்தியாவின் மார்பை அழுத்திக்கொண்டிருந்த பெரிய சுமை இறக்கப்பட்டு விட்டது. இதைச் செய்யுமாறுதான் அன்றைக்கு நான் சகாக்களிடம் சொன்னேன். ஆனால், 'செய்தே ஆக வேண்டிய ஒரு கெட்ட காரியம் இது' என்று ஒன்றைக் கண்டுபிடித்ததற்காக நான் பெருமைப்பட்டுக் கொள்ள முடியாது. சொன்னதை வாபஸ் பெறாமல் கடைசி வரை அதில் உறுதியாக நின்றேனல்லவா? அந்தத் துணிச்சலுக்காக வேண்டுமானால் பெருமைப்படலாம். இந்த விஷயத்தில் இன்று எனது சகாக்கள் திட்டமிட்டு மௌனம் சாதிப்பதைப் பார்க்கிறேன். அந்த மௌனத்தின் காரணத்தை உணர்ந்து ரசிக்கும் போது ஒரு குறும்புத்தனமான மகிழ்ச்சி எனக்கு உண்டாகிறது. கர்வம், எங்கு பார்த்தாலும் கர்வம்! ஆனால் இதையெல்லாம் மீறி ஒரு நிரந்தர விஷயம் இருக்கிறது — அன்பு.

ஆகஸ்டு பதினைந்து அருகே நெருங்க, நெருங்க அந்த மகிழ்ச்சியைப் புதைத்துக் கொண்டு இந்தியர் உள்ளத்திலும் பாகிஸ்தானியராகப் போகிறவர்கள் மனத்திலும் கடுமையான வேதனை ஏற்பட்டது. அச்சமும் உண்டாயிற்று. பிரிவுத் துயரம், கொலைகளாலும் கற்பழிப்புக்களாலும் கடத்தல்களாலும் ஏற்படும் துன்பம், இன்னும் என்னென்ன புதிய கொடுமைகள் மேலே மேலே நேரப் போகின்றனவோ என்ற அச்சம், எல்லாம் சேர்ந்து கொண்டன.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

ஒருவன்: "எது நாற்காலி புதுசா இருக்கு. எப்ப வாங்கினே?"

மற்றவன்: "இன்டர்வியூவுக்குப் போன இடத்தில் 'டேக் யுவர் ஸீட்' என்றார்கள். எடுத்து வந்துட்டேன்."

— நாகை பாபு.





நண்பர்: நானும் கவனிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன். ஞாயிற்றுக் கிழமை வந்தா ரொம்ப சந்தோஷமா இருக்கீங்களே, ஏன்?

எழுத்தாளர்: அதுவா? நான் பத்திரிகைகளுக்கு அனுப்பின கதைகள், துணுக்குகள் அன்னிக்கு நிச்சயம் திரும்பி வராது பாருங்க...! அதனாலதான்...

— வி. சௌரிராஜன்.

"ஓய்வு பெற்ற பிறகு என் அலுவலக நினைவுகளைப் புத்தகமாக எழுதப் போகிறேன். என்ன தலைப்பு வைக்கலாம்?"

"பகல் நேரக் கனவுகள்."

— க. ரவீந்திரன்.



"அடிக்கடி 'ஏறத்தாழ'ங்கிற வார்த்தையை உபயோகிச்சு மேடையிலே பேசுகிறாரே அவர் யாரு?"

"அவர்தாங்க யூனியன் செயலாளர் சண்முகம். கம்பெனியில் லிஃப்ட் ஆபரேட்டரா இருக்காரு."

— என். வி. ரமணி.

நடைமுறை அரசியல் என்பது உண்மைகளின் புறக்கணிப்பு.
சொன்னபடி வாழ்வதைக் காட்டிலும் கொள்கைக்காகப் போராடுவது சுலபம்.

— ஆல்ஃபிரெட் ஆட்லர்











Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032.

Assistant Editor: P.S. Mani — Editor: K. Rajendran

*Editorial Office:* 28, Fifth Street, Lake Area, Nungambakkam, Madras-600 034. (Phone: 473389)

*Administrative Office:* Race Course Road, Guindy, Madras-600 032 (Phones: 431543, 434157 Press: 434190)

தேவை அறிந்து
நீங்கள் கொடுப்பதுபோல
தரம் அறிந்து
நாங்கள் கொடுக்கிறோம்.



சேலம் உருக்காலை
சேலம் 636 013 தமிழ்நாடு

**சேலம் எவர்சில்வர்.**

கேட்டு வாங்குங்கள். எங்களின் தரமே எல்லை! எவரும் இதுவரை தந்ததே இல்லை!

Sista's - SSP.558.86 TM C

